Regd. No. 2975

ஸ்ரீ

# ஸ்ரீராமாநுஜன்-379, 380

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர், மஹாவித்வான்

# SRI RAMANUJAN

Mahamahimopadhyaya
*Editor:*
P. B. ANNANGARACHARYA, Kanchipuram-631503.

வருடச் சந்தா ரூ. 10

பேரருளாளன் பெருந்தேவித் தாயார்
திருவடிகளே சரணம்



ஆழ்வார்எம்பெருமானார் ஜீயர்
திருவடிகளே சரணம்

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி-ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

சித்தார்த்தி ஸ்ரீ மாசிமீ



ஸ்ரீ சின்னஸ்வாமி ஸந்நிதிக்கு மங்களாசாஸனத்திற்காக எழுந்தருளும் அவஸரம்.



ஸ்ரீஸ்வாமி பட்டணப் பிரவேசத்தில் தங்கப் பல்லக்கில் எழுந்தருளுதல்.

# வானமாமலை விசேஷங்கள்



ஸ்ரீ பெரிய ஸ்வாமியின் யாத்திரையின் போது எடுத்த படம்



ஸ்ரீ சின்ன ஸ்வாமி ஸந்நிதிக்கு மங்களா சாஸனத்திற்கு எழுந்தருளும் போது த்வஜ ஸ்தம்பத்தடியில் ஸ்ரீ சடகோபன் எழுந்தருளி மரியாதை செய்தல்



இயல் கோஷ்டியில் திருவீதியில்
திவ்ய தேச ப்ரஸாதங்களைப்
பெற்றுக் கொண்டு ஸ்ரீ ஸ்வாமி
எழுந்தருளுதல்



ஸ்ரீ ஸ்வாமியின் பட்டணப் பிரவேசத்தின்
போது பாதுகைகளை எச்சரிகை,
ஸ்தோத்ரபாடகோஷ்டியில் எழுந்தருளப்
பண்ணிச் செல்லுதல்.

# ஸ்ரீராமாநுஜன்-379, 380



ஆசிரியர்

ஸ்ரீ காஞ்சி ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்

| தொகுதி 32 | சித்தார்த்தி௵ மாசிமீ 1980 பிப் | பகுதி 11, 12 |
|---|---|---|


## அப்த பூர்த்தி விஜ்ஞாபனம்

நமது ஸ்ரீராமாநுஜனுக்கு இந்த ஸஞ்சிகையோடு முப்பத்திரண்டாவது பிராயம் பூர்த்தியடைந்து, அடுத்த ஸஞ்சிகையில் முப்பத்து மூன்றாவது பிராயம் தொடக்கமாகிறது. இத்தனை காலமும் அன்பும் ஆதரவுங்கொண்டு அபிமானித்து வந்த மஹான்கள் மேன்மேலும் குறையற அபிமானித்து வருவர்களென்பதில் ஐயமில்லையாதலால் நாம் பிரார்த்திக்க வேண்டுவது மிகையாயினும் நமது கடமைக்காக நாமும் பிரார்த்திக்கின்றோம். அடியேன் [ப்ர- அண்ணங்கராசார்ய ஸ்ரீவைஷ்ணவ தாஸன்] அடுத்த பங்குனி விசாகத்தன்று எண்பத்தொன்பதாவது பிராயத்தைக் கடந்து தொண்ணூறாவது பிராயம் புகுபவனாயிருப்பதால் அசக்தியின் எல்லையில் நிற்கின்றேனென்பதை விஜ்ஞாபிக்க வேண்டியதில்லை. ஆகவே ஸ்ரீராமாநுஜனை இவ்வளவோடு நிறுத்திக்கொள்ளலாமா என்றொரு ஆலோசனையும் தோன்றிற்று.



ஆனாலும் அந்தராத்மா பூர்த்தியாக அனுமதிக்கவில்லை. பேரருளாளன் பெருந்தேவித்தாயாருடையவும் ஆழ்வாரெம்பெருமானார்ஜீயர் முதலான ஸகலாசாரியர்களினுடையவும், ஸஹ்ருதயஸஹ்ருர்மணிகளான ஸகலபாகவதோத்தமர்களினுடையவும் திருவருளை நம்பித் தொடர்ச்சியாக நடத்திவர உபக்ரமிக்கிறபடி. ... ... ...

## நாம் பெற்ற பாக்கிய விசேஷங்கள்

✖ அருளார் திருச் சக்கரத்தால் அகல்விசும்பும் நிலனும் இருளார் வினைகெடச் செங்கோல் நடாவுதிர் ' என்று நம்மாழ்வாரும் பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ்சோராமே ஆள்கின்ற வெம்பெருமான் ✖ என்று சூடிக் கொடுத்த சுடர்க்கொடியும் அருளிச் செய்தபடி உபய விபூதி நாதனை எம்பெருமானுடைய லீலா பரிகர பூதமான இவ்விருள்தருமா ஞாலத்தில் பிறப்பதை ஞானிகள் இழித்துரைக்கின்றார்கள். ✖ இருள் தருமா ஞாலத்துளினிப் பிறவியான் வேண்டேன் ✖ என்று நம்மாழ்வாரும். ✖ ஆதலால் பிறவி வேண்டேன் ✖ என்று தொண்டரடிப் பொடியாழ்வாரும் இங்ஙனே மற்றும் பலபல மாஞானிகளும் பேசியிருப்பது ப்ரஸித்தம். இப்படி இந்த லீலாவிபூதியில் பிறப்பை இகழ்ந்துரைத் திருப்பதுபோல நித்ய விபூதியில் சேர்வதை வெறுத்துரைத்திருப்பதுமுண்டு; திருவாறன்விளையென்கிற மலைநாட்டுத் திருப்பதியிலீடுபட்ட நம்மாழ்வார் ✖ சிந்தை மற்றொன்றின் திறத்ததல்லாத் தன்மை தேவபிரானறியும் ✖ என்றார். தொண்டரடிப் பொடியாழ்வாரும் இச்சுவை தவிர யான்போய் இந்திரலோகமாளுமச்சுவை பெறினும் வேண்டேனென்றார். **இந்திரலோக**மென்றது பரமபதத்தையே யென்றுணர்க. ✖ ✖ ஸ்நேஹோமே பரமோ ராஜந்!......... பாவோ நாந்யத்ர கச்சதி ✖ என்ற திருவடி இன்னமும் திருநாடு செல்லவில்லையென்பது ப்ரஸித்தம். இத்தகைய ஸ்ரீ ஸூக்திகளை யநுஸந்திக்கும்போது மேன்மேலும் இவ்விபூதியில் பிறக்கவேணுமென்கிற குதூஹலமே நமக்கு மிகுகின்றது. இப்போது நாம் இந்நிலத்திற் பிறந்து எவ்வகையான ஆனந்தங்களை யநுபவித்து வருகின்றோமோ, இத்தகைய ஆனந்தங்களுக்குக் குறைபாடு இல்லாமே எம்பெருமான் நமக்கு மேன்மேலும் எத்தனை ஜன்மங்களளித்தாலும் அவற்றை நாம் ஆனந்தமாக வரவேற்கத் தட்டுண்டோ?

ஸுக்ருதார்ஜனம் பண்ணுகைக்கு நிலமல்லாத த்வீபாந்தரங்களில் நாம் பிறந்திலோம். ஸகலச்ரேயஸ்ஸுக்களுக்கும் ஆகரமான ஜம்பூ த்வீபத்திலே [நாவலம் பெரிய தீவிலே] பரதகண்டத்திலே பிறந்துள்ளோம்; அதிலும் க்ரிமிகீட பசுபதங்காதி யோனிகளிற் பிறவாமே ✖ துர்லபோ மாநுஷோ தேஹ:✖ ✖மானிடப்பிறவியந்தோ மதிக்கிலர்✖என்று அரிதாகச் சொல்லப்பட்ட மானிடப்பிறவி பெற்றுள்ளோம். அதிலும் வேத வேதாந்த வேதாங்கங்களை ஓதியுணர்வதற்குப் பாங்கான ப்ராஹ்மணகுலத்திலே பிறக்கப் பெற்றுள்ளோம். அதிலும் ஸாதநாந்தர தேவதாந்தர ப்ராவண்ய சாலிகளாய் ✖ பிபேத்யல்பச்ருதாத் வேதோ மாமயம் ப்ரதரிஷ்யதி ✖ என்று வேதம் நடுங்க நிற்பவர்களாய் ✖ த்ருச்யம் மித்யா த்ருஷ்டி கர்த்தா சமித்யா ✖ என்கிறபடியே ஸர்வமித்யாத்வ வாதிகளாய் பகவத் ஸ்வரூபரூப குணவிபூதி சேஷ்டிதங்களில் விசத விமல விஜ்ஞான தரித்ரர்களாய் பகவத் குணாநுபவ ஸாதநஸாமக்ரீ சூந்யர்களாய் ✖ காணிலு முருப்பொலார் செவிக்கினாத கீர்த்தியார் பேணிலும் வரந்தர மிடுக்கிலாத தேவரைப்பற்றித் துவள்பவர்களாயிருப்பார் திரளிலே பிறவாமே ஸ்ரீ பராங்குச பரகாலயதிவர யதீந்த்ரப்ரவணாதி திவ்ய ஸூக்தி வைதேசிகர்களாகித் தொலையாமே அருளிச்செயற் கடலிலும் ஸ்ரீபாஷ்ய பகவத் விஷய ஸ்ரீவசந பூஷண ஆசார்யஹ்ருதயாதிகளான அம்ருத ஸாகரத்திலும் அவகாஹிக்கும் பாக்யமுடையார்களின் ஸந்ததியிலே தோன்றப் பெற்றிருக்கிறோம். ✖ மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்து போருகின்ற நாம் கீழ்க் கழிந்த ஜன்மங்களையறிய அசக்தர்களாயினும் இப்போது நமக்கு நேர்ந்திருக்கும் ஜன்மத்தின் நன்மையை நன்கு அறிந்திருக்கின்றோம். இப்பிறவியில் நாம் அநுபவித்துவரும் ஆனந்தம் ஒப்புயர்வற்றது. இவ்வானந்தம் திருநாட்டிலும் கிடைப்பரிது என்னத் தட்டில்லை. ✽

"இவ்வானந்தம் திருநாட்டிலும் கிடைப்பரிது என்னத் தட்டில்லை' என்றவிது அதிவாதமன்று. அதிசயோக்தியன்று, பரலோகமே கிடையாதென்கிற துர்வாதிகளில் நாம் சேர்ந்தவர்களல்லோம் ஸ்ரீ வைகுண்டமுண்டு, அவ்விடத்தில் ஒப்புயர்வற்ற ஆனந்தானுபவமுமுண்டு என்கிற பரமபவித்திரமான ஸித்தாந்தத்தைப் பேணுமவர்களே நாம். தைத்திரீய- உபநிஷத்தில் "ரஸோ வை ஸ: ரஸம்ஹ்யேவாயம் லப்த்வா ஆநந்தீ பவதி" என்கிற வாக்கியத்தை அடிக்கடி ஓத நேர்கின்றது. ஓதும்போது நாம் பரமபதத்திலிருப்பதாகவே

நினைக்கிறோம். ஆனாலும் இவ்விபூதியில் அதிலும் காஞ்சீ க்ஷேத்திரத்தி லிருந்து கொண்டு நாம் எய்தும் ஆனந்தத்தை நினைக்குங்காலுண்டாகு மானந்தம் அப்ரமேயமானது. இங்கு நாம் தெரிவிக்கிற இரண்டு ஆனந்தங்களை அன்பர்கள் குறிக்கொள்ளவேணும்.

பகவத் கோஷ்டிகளிலும் பாகவதகோஷ்டிகளிலும் அந்வயித்து அதனால் பெறும் ஆனந்தம் முதலது. இவ்வானந்தத்தைப் பெற நாம் பாக்கியம் பண்ணினோமேயென்று உண்டாகுமானந்தம் இரண்டாவது. **முராரி** யென்கிறமஹாகவி தன்னுடைய **அநர்க்கராகவ** மென்கிறநாடகத்தில் ஸீதாபிராட்டியைப் பற்றிச் சொல்லுமிடத்து **''லஜ்ஜிதுமபி லஜ்ஜதே''** என்கிறார் வெட்கப்படுவதற்கும் வெட்கப்படுகிறாளென்பது இதன் பொருள். இது ஒரு சமத்காரமான வார்த்தை 'ஆனந்தாநுபவத்தைப் பற்றி ஆனந்தப்படுகிறோ' மென்று நாமெழுதுவது இதைப் போன்ற தன்று. அது நமது உள்ளத்திற்கே நிலமாகக் கூடிய ஆனந்தம். திருக் குடந்தை ஸமீபத்தில் நந்திபுரவிண்ணகரமென்று ஒரு திவ்ய தேசம். **நாதன் கோவில்** என்று இத்தலம் வழங்கப்பெறும். இதற்குப் பதிகம் பாடின திருமங்கையாழ்வார் (5-10-8) "மண்ணிலிது போலு நகரில்லை யென வானவர்கள் தாம் மலர்கள் தூய், நண்ணியுறைகின்றநகர் நந்திபுர விண்ணகர நண்ணுமனமே" என்றருளிச் செய்தார். நித்திய விபூதி வாஸிகளான நித்யஸூரிகளும் இத்தலத்தே போந்து 'இம்மண்ணுலகில் இத்திருப்பதிபோன்ற திருப்பதி வேறில்லை' யென்று புகழ்ந்துகொண்டு பரிசர்யைகள் பண்ணிஇங்கேயே நித்ய வாஸம் பண்ணிக் கொண்டிருப்ப தாகச் சொல்லப்படுகிறது. அந்த வானவர்களைத் திருமங்கையாழ்வார் கட்கண்ணாலோ உட்கண்ணாலோ காணாமல் இங்ஙனே யருளிச் செய்திருக்க மாட்டார். இப்படி ஒரு திவ்ய தேசத்திலருளிச் செய்தது ஸகல திவ்ய தேசங்களுக்கு முபலக்ஷணமேயென்று கொள்ளக்கடவது. பட்டர் ஸ்ரீரங்க ராஜஸ்தவத்தில் "அஹ்ருதஸஹஜதாஸ்யாஸ் ஸூரயஸ் ஸ்ரஸ்தபந்தா: விமலசரமதேஹா இத்யமீ ரங்கதாம. மஹிதமநுஜதிர்யக் ஸ்தாவரத்வா: ச்ரயந்தே ஸூநியதம்" என்று நித்ய ஸூரிகளும் முக்தர்களும் முமுக்ஷுக் களும் மநுஷ்ய திர்யக்ஸ்தாவர ஜன்மங்களை ஏன்று கொண்டு திருவரங்கம் பெரிய கோயிலில் நித்ய வாஸம் செய்வதாக அருளிச்செய்தார். இதுவும் மற்றுள்ள திவ்ய தேசங்களுக்கு உபலக்ஷணமேயாகும். பரமப்ராமாணிகர் களான ஆழ்வார்களும் ஆசாரியர்களும் இங்ஙனே யருளிச் செய்வதை

அதிவாதமென்று நெஞ்சாலும் நினைக்கத் தகாது. இவற்றை யடியொற்றியே கவிசக்ரவர்த்தியான கம்பரும் தமதுராமாயணத்தில் அயோத்திமாநகரைவருணிக்குமிடத்து "எவ்வுலகத்தோர் யாவரும் தவஞ் செய்தேறுவா ஞதரிக்கின்ற. அவ்வுலகத்தோர் இழிவதற்கருத்தி புரிகின்ற தயோத்திமாநகரம்" என்றூர். எல்லாவுலகங்களிலுமுள்ள எல்லோராலும் தவம்புரிந்து பெறவிரும்பப்படுகின்ற ஸ்ரீவைகுண்டத்திலுள்ளாரும் இறங்கி வந்து இங்கே வசிக்க விரும்பும் நிலம் திருவயோத்தி யென்றபடி. ஆக அங்குள்ளாரும் இங்கு வந்து வசிக்க விரும்பு மிடத்தே உறைகின்ற நாம் எவ்வளவு பாக்யசாலிகளென்பதைப் பன்னியுரைக்க வேணுமோ? நாம் பிறந்து வளருமூரோ ஸாமான்யமான தன்று. தேவப்பெருமாள் திருவடிவாரத்திலுறையும்பாக்கியமுடையோம் திருமங்கையாழ்வார் "வேள்வும் விழவும் வீதியிலென்று மருதவூர் நறையூர்" என்று நாச்சியார்கோயிலென்னும் திருநறையூரைப் புகழ் கின்றூர். அத்தலத்து வீதியிலென்று மருதவிழவின் வைபவம் ஆழ்வார் திருவுள்ளத்திற்கே நிலமாகவேணும் உண்மையில் அந்த வைபவம் நம் தேவப்பெருமாள் ஸன்னிதிக்கேயன்றே ஏற்குமது. இங்கு வாழ்வ தொன்றே பேரின்ப வெள்ளமன்றே. "கழுதை மேய்த்தாகிலும் கச்சி வாஸம் பெருய்" என்பது பழமொழியாம்.

சாரீரகமீமாம்ஸையின் சரமஸூத்ரம் **அநாவ்ருத்திச் சப்தாதநாவ்ருத்திச் சப்தாத்** ✗ என்பது. இதனல் மோக்ஷலோகம் புக்கவர்களுக்கு இந்நிலத்தில் மீட்சியில்லையென்று நிர்ணயிக்கப் படுகின்றது. இந்த நிர்ணயத்தை ஆழ்வார்களும் ✗ மீட்சியின்றி வைகுந்தமாநகர் ✗✗ போயினுற் பின்னையித் திசைக் கென்றும் புணைக் கொடுக்கிலும் போக வொட்டாரே ✗ என்றிவை. முதலான பாசுரங்களினுல் வற்புறுத்தியுள்ளார்கள். அப்படியிருக்க அங்குள்ளாருமிங்கேவந்து பணிந்து களிக்கின்றூர்களென்றுல் இஃது எங்ஙனே பொருந்துமென்று பலர் கேட்பதுண்டு. இந்த சங்கையை வேதாந்திகளேயெடுத்துப் பரிஹரித்துள்ளார்கள். புநராவ்ருத்தியில்லை யென்றது கர்மநிபந்தனமான மீட்சியில்லை யென்றபடியத்தனை. தைத்திரீய—உபநிஷத்தில் ✗ **இமாந் லோகாந் காமாந்நீ காமரூப்யநுஸஞ்சரந்** ✗ என்று ஓதியிருப்பதைக் குறிக்கொள்ள வேணும். சாந்தோக்யத்திலும் 'ஸ ஸ்வராட் பவதி: தஸ்ய ஸர்வேஷு லோகேஷு காமசாரோ பவதி" என்றேதிற்று. மற்றேருபநிஷத்திலும் ✗ யேந யேந தாதா கச்சதி தேந

தேந ஸஹ கச்சதி × என்றோதிற்று. இவற்றால் என்ன தெரிவிக்கப் படுகின்றதென்றால், பரமபத நிலயனான பரம புருஷன் தன்னுடைய விபூதிவிஸ்தரங்களைக் காண்பதற்குப் புறப்பட்டு வருவதுண்டு, அவனோடு கூட நித்ய முக்தர்களும் வருவதுண்டு. அப்பெருமானுடைய நியமனத்தைப்பெற்று இங்கே குணானுபவம் செய்து கொண்டிருப்பதுமுண்டு என்பது தெரிவிக்கப்படுகிறது. மேலே யெடுத்துக் காட்டிய உபநிஷத் வாக்கியத்தில் [காமாந்நீ காமரூபீ] என்றதன் பொருளாவது (காமாந்நீ) என்றவிடத்துக் காமசப்தம் × ஸோச்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ்மணா விபச்சிதா × என்றவிடத்திற்போல கல்யாண குணவாசகமாய் "கணைநாணிலோவாத் தொழில் சார்ங்கன் தொல் சீரை நன்னெஞ்சே! ஓவாதவூணாகவுண்" (பெரிய திருவந்தாதி) என்கிற நம்மாழ்வாரருளிச் செயலின் படியே குணானுபவத்தையே ஊணாகக் கொண்டவனாய் என்று [காமாந்நீ] என்பதற்குப் பொருள். [காமரூபீ] ஸ்வாபிமதமான உருவத்தைப் பரிக்ரஹித்தவனாகி யென்று பொருள். இங்கே (அநுஸஞ்சரந்) என்றது உயிரானவார்த்தை. பரம புருஷமநுஸ்ருத்ய ஸஞ்சரந் என்றும், பரமபுருஷஸ்ய ஆஜ்ஞாமநுஸ்ருத்ய ஸஞ்சரந் என்றும் பொருள் கொள்ளப்படுகிறது. ஏவஞ்ச நித்ய முக்தர்களுக்கு லீலா விபூத்யநுபவம் ப்ராப்தமாகக் குறையில்லை யென்பது தேறிற்று. ... ... ...

—கடிதம்—

## ஸ்ரீமான் உ.வே. மதுராந்தகம் ஸ்வாமியின் சதாபிஷேக வைபவம்

ஸ்ரீ உபய வேதாந்த வித்வான், ந்யாய வேதாந்த கேஸரி, தர்க்க ரத்னம், தேசிக தர்சன ரத்நாகர மதுராந்தகம் திருமலை ஈச்சம்பாடி வீரராகவாசார்ய ஸ்வாமியின் சதாபிஷேக மஹோத்ஸவம் ஸ்ரீமத் அழகியசிங்கரின் அநுக்ரஹத்தால் வெகு விமர்சையாக ஸ்ரீ ரங்க க்ஷேத்திரத்தில் ஸ்ரீநிகமாந்த மஹாதேசிகன் திருமாளிகையில் கொண்டாடப்பட்டது.

10—2-1980 ஞாயிற்றுக்கிழமை யன்று இரவு ஸ்ரீமத் அழகியசிங்கர் தேசிகன் திருமாளிகையருகே புத்தன்கோட்டகம் ஸ்வாமி திருமாளிகையில், ஸ்ரீ லக்ஷ்மீ ந்ருஸிம்ஹனை ஸ்ரீ ஸ்வாமி தௌஹித்ரன் N. V. வாஸுதேவாசாரியார் ப்ரார்த்தனையின் பேரில் எழுந்தருளப்பண்ணி, 11—2—1980 திங்கட்கிழமை பூர்த்தியாக விச்வரூப அபிகமனம், இஜ்யை, பானக ஆராதனம் முதலியவைகளைக் கண்டருளியாயிற்று. அபிகமன ஆராதனம் ஆனதும், 9-மணிக்குமேல், சதாபிஷேக உத்ஸவம் வேதபாராயண உபக்ரமத்திற்கு ஸ்ரீமத் அழகியசிங்கர் எழுந்தருளி, மதுராந்தகம் ஸ்வாமிக்கு நூறுரூபாய் ஸம்பாவனையும் அனுக்ரஹித்தாயிற்று. அன்று இரவு, அஹோபிலமடம் ஆஸ்தான வித்வான், பெருகாரணை சக்ரவர்த்தியாசாரியர் ஸ்வாமியின் உபந்யாஸம் நடந்தது. மறுநாள் செவ்வாய்க் கிழமை இரவு, ஸ்ரீமத் அழகியசிங்கர், சரணாகதி தத்வத்தை விபீஷண

சரணாகதி மூலமும், புதன்கிழமை இரவு, ஏகாதசி மாஹாத்ம்யத்தை ருக்மாங்கதன் சரிதத்தாலும் (ஸ்ரீமத் அழகியசிங்கரே) உபந்யஸித்தாயிற்று. வியாழக்கிழமை 14—2—1980 ஸ்ரீமத் ஆண்டவன் வேதாந்த ராமாநுஜ மஹாதேசிகன் "ஆசார்யவைபவம்" என்பதைப்பற்றி உபந்யாஸம் அநுக்ரஹித்தாயிற்று,

ஸ்ரீ, உப. வே. வித்வான் அபிநவ தேசிக உத்தமூர் வீரராகவாசாரியார் ஸ்வாமியும் ரங்காஸ்தாநே ரஸிகமஹிதே மகுடமாய் வைத்து விமலமநஸ்ஸுடைய வித்வத் ஸேவையை ப்ரசம்ஸித்து உபந்யஸித்தது அசேஷ சித்தரஞ்ஜகமாய் அமைந்தது.

13—2—1980 புதன் முதல், வெள்ளி முடிய, மூன்று நாட்கள் வித்வத் ஸதஸ் ஸ்ரீமத் அழகியசிங்கரின் ஆத்யக்ஷத்தில் புத்தன் கோட்டகம் ஸ்வாமி திருமாளிகையில் நடைபெற்றது. ஸ்ரீமத் ஆண்டவன் வெள்ளிக்கிழமை மத்யான்னம் நடந்த ஸதஸ்ஸை அலங்கரித்தார். ஸ்ரீமத் ஆண்டவன், ஸ்ரீமத் அழகியசிங்கர், உத்தமூர் ஸ்வாமி, மதுராந்தகம் ஸ்வாமி ஆத்யக்ஷத்தில் நடந்த இந்த ஸதஸ் மாலோல வித்வத்ஸதஸ்ஸுக்கு துல்யமாய் விளங்கியது. மாலோல வித்வத் ஸதஸ்ஸுக்கு எழுந்தருளும் எல்லா ஸ்வாமிகளும் இங்கு ஸேவை ஸாதித்தார்கள்.

இந்த ஏழு தினங்களிலும், வேதபாராயணம், மற்றும் க்ரந்த பாராயணங்கள் தேசிகன் திருமாளிகையில் இருவேளையும் யதா க்ரமம் நடந்தது. ததீயாராதனத்திற்கு ஸ்ரீமத் அழகியசிங்கர் ரூ. ஆயிரமும் ஒரு மூட்டை தண்டுலமும் அநுக்ரஹித்தாயிற்று. ஸ்ரீமத் ஆண்டவன் ரூ 1000 ம் வேஷ்டி, புடவையும் அநுக்ரஹித்தாயிற்று.

17—2—80, ஞாயிறு மாலை 4 மணிக்கு தமிழ்நாடு கவர்னர் பிரபுதாஸ் பட்வாரி தலைமையில் கதாபிஷேக மஹோத்ஸவம் கொண்டாடப்பட்டது. ஸ்ரீமத் அழகிய சிங்கர் பல வித்வான்களுடன் கோஷ்டியை அலங்கரித்தாயிற்று. கண்டோம், கண்டோம், கண்ணுக்கு இனியன கண்டோம். சுமார் 1000 பேருக்குமேல் பந்தல் நிறைய வந்திருந்தார்கள். டில்லி Dr.N.P. ஸ்வாமி ஸ்வாகதம் நிவேதனம் செய்தார். உத்ஸவஸபையின் அத்யக்ஷர் ஸ்ரீ S. R. ஸ்ரீநிவாஸ தாதாசாரியார் (முதல் திருமாளிகை) ஸ்வாமியின் குணதிசயங்களை எடுத்துரைத்தார்.

(இதன் தொடர்ச்சியை ராபர் 3ம்-பக்கம் காண்க)

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம்

அண்ணங்கராசாரியர் ஸ்வாமியின்

**ஸித்தார்த்தி வருஷத்திய**

# மீன விசாகோத்ஸவப் பத்தீரிகை

## ஸ்ரீஸ்வாமியின் எண்பத்தொன்பதாவது திருநக்ஷத்திர பூர்த்தியை முன்னிட்டு

ஸ்ரீ காஞ்சியில் ஸ்வாமியின் திருமாளிகையில்

நாளது பங்குனிமீ 13உ (26—3—80) புதன்கிழமை முதல்

பங்குனிமீ 22உ (4—4—80) வெள்ளிக்கிழமை வரை

வேதபாராயணம், திவ்யப்ரபந்தஸேவை, ரஹஸ்யாநுஸந்தாநம், ஸ்தோத்ரபாடம், வித்வான்களின் உபந்யாஸம் இவை நடைபெறும் ஆப்தர்கள் அனைவரும் கூடியிருந்து சிறப்பாக நடத்திவைக்கும்படி பிரார்த்திக்கப்படுகிறுர்கள்.

காஞ்சீபுரம்,
15—3—80

இங்ஙனம்,
ப்ரதிவாதி பயங்கரம் **செல்வமணி** என்கிற
**ரங்கநாத தாஸன்.**

SRI KANCHI MAHA VIDWAN

## Jagadacharya Simhasanadhipathi

## P. B. ANNANGARACHARYA SWAMI'S

# Ninetieth Birth Day Celebrations

The *N*inetieth Birthday of *S*RI *S*WAMI is being celebrated this year at his residence in Kanchi from *26—3—80* to *4—4—80*. Vedas, Divya Prabandhams, *S*totras and Rahasyas will be chanted. Lectures will also take place as usual.

You are cordially invited to attend.

Kanchipuram,
17—3—80

*CHELLAMANI alias*
*RANGANATHACHARYA*

ஸ்ரீமத் பரமஹம்ஸத்ரிதண்டி ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ
ஜீயர் ஸ்வாமிகளும் ஸ்ரீகாஞ்சீ ஸ்வாமிகளும்.



சென்னை ஸத்காலக்ஷேப ஸபையின் காரியதர்சியான ஸ்ரீமான் பக்தரத்னம் **A. V. கண்ணபிரான் நாயுடுவின்** செல்வக் குமாரன் **ஸ்ரீமான் வாஸுதேவ நாயுடு.** புகழுடம்புடன் விளங்குபவன் *(1—1—80).*



# ஸ்ரீ பாஷ்யகாரரருளிய அரியபெரிய அர்த்த விசேஷம்

எம்பெருமானார் ஸ்ரீபாஷ்யத்தின் முடிவில் அநாவ்ருத்தி ஸூத்ர பாஷ்யத்தில் "நச பரமபுருஷ: ஸத்ய ஸங்கல்ப: அத்யர்த்த ப்ரியம் ஜ்ஞாநிநம் லப்த்வா கதாசிதாவர்த்தயிஷ்யதி" என்கிற ஸ்ரீஸூக்தியினால் 'சேதனலாபமே ஈச்வரனுக்குப் பேறு' என்கிற ஸத்ஸம்ப்ரதாய ரஸ்ய ரஹஸ்யப் பொருளை ஸ்தாபித்தருளினர். அங்கே விஷயம் என்னவென்றால்; மோக்ஷத்திற்குச் சென்ற சேதநன் திரும்பி வருதல் உண்டா இல்லையா என்று விசாரம் வந்தது. ஈச்வரன் கேட்பாரற்ற ஸ்வதந்திரனாதலால் அந்த ஸ்வாதந்திரியத்தினால் முக்தாத்மாவைத் திருப்பியனுப்பி விடக் கூடுமன்றோ என்கிற சங்கை யுண்டாக, ஸூத்ரகாரர் *அநாவ்ருத்திச் சப்தாத்* என்று ஸூத்ரமியற்றினர். முக்தாத்மா ஒரு நாளும் திரும்பி வருவதில்லை யென்று சாஸ்த்ரம் முறையிட்டிருக்கையாலே புநராவ்ருத்தி கிடையாதென்று ஸூத்ரகாரர் சொல்லிவிட்டார்; பாஷ்யகாரரும் இவ்வர்த்தத்தை வியாக்கியானித்தார். ஆனால் தோன்றின சங்கைக்கு த்ருப்திகரமான ஸமாதானம் வந்ததாகவில்லை. ஸூத்ர பாஷ்யாவதாரிகையில் ஈச்வரன் ஸ்வதந்திரனாகையாலே கேட்பாரற்று முக்தாத்மாவை மீண்டும் கீழே தள்ளிவிட நினைத்தால் என் செய்வது? என்பது சங்காசரீரம். 'தள்ள மாட்டானென்று சாஸ்த்ரம் சொல்லியிருக்கையாலே' என்று விடைகூறினதால் என்ன ஸமாதானம் வந்ததாகும்? சாஸ்த்ரத்தையும் மீறிச் செய்வதன்றோ ஸ்வதந்த்ரக்ருத்யம். அப்படிப்பட்ட ஸ்வாதந்திரியத்தாலே ஈச்வரன் ஒன்று செய்யப் புகுந்தால் சாஸ்திரம் குறுக்கே நிற்குமோ? என்றன்றோ இங்குப் பூர்வபக்ஷியின் கருத்து?

அதற்குத் தினவடங்கச் சொல்லவேண்டிய ஸமாதானத்தை ஸூத்ரகாரர் சொல்லாத குறைதீர நம் பாஷ்யகாரர் வெகு அழகாக அருளிச் செய்கிறார். ஈச்வரன் ஸ்வதந்திரனே யானாலும் உன்மத்தனல்லன், மூர்க்கனல்லன், அரஸிகனல்லன். ஸத்யஸங்கல்பனென்று ஓதப்பெற்றவன். தன்னுடைய மநோரதத்திற்கு மாறுபாடாக நடந்து கொள்பவனல்லன். ஒரு சேதநனைப் பெறுவதற்கு அவன் என்ன பாடு படுகிறான் தெரியுமோ? அவன் ஸ்ருஷ்டி பண்ணுவதும் அவதாரங்கள் பண்ணுவதும் சேதநரை லபிக்கைக்காகவன்றோ?

எவ்வளவோ தவப்பயனாக ஒரு சேதநனை லபித்த பின்பும் ரஸிகனான பரம புருஷன் அவனை இழப்பனோ?—என்று இவ்வளவு மெழுதி நம் பாஷ்யகாரர் சங்காபரிஹாரத்தைத் தலைக்கட்டியுள்ளார். இதில் "பரம புருஷ: ஜ்ஞாநிநம் லப்த்வா" என்கிற ஸ்ரீஸூக்திவிந்யாஸமானது எம்பெருமானார் திருவுள்ளத்தில் திருவாய்மொழி யமுதக்கடல் அலையெறிகிறபடியை நன்குகாட்டுகிறது. கீதையில் *ஸ மஹாத்மா ஸுதுர்லப:" என்று எம்பெருமான் தானே சோதி வாய்திறந்து பணித்ததையும் உடனே உதாஹரிக்கிறார். தாரக போஷக போக்யமானவை எல்லாம் கண்ணனென்றிருக்கிற மஹாத்மா மிகவும் துர்லபன் என்று பகவான் தன் திருவாக்காலே சொன்னால், அப்படிப்பட்ட வொரு மாஞானியை லபிக்கைக்கு அவன் எவ்வளவோ பாடு படுகிறவன் என்பது விளங்கவில்லையா? ஆகவே சேதந லாபமே ஈச்வரனுக்குப் பேறு என்கிற ஸித்தாந்தம் நன்கு பொலிந்ததாயிற்று.

யத்கிஞ்சித்ஸுக்ருதகரணம், பேற்றுக்கு த்வரிக்கை என்னுமிவை யெல்லாம் நம் பக்கலில் அடியோடு வேண்டாவோ? என்று பிறர் க்ஷேபிக்க வருவர்கள். சைதந்ய கார்யமாக விளையுமவை நம்மால் தடுக்க வொண்ணாதவை. அவையுங்கூட நம்மால் விளைவனவல்ல. "நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாண நிபுண:" என்கிற வேதாந்த தேசிக ஸூக்தியால் இவ்வுண்மையும் திண்மைபெறும். ஸொத்தைப் பெற்று அனுபவித்து ஆநந்திக்கவேணுமென்கிற ஆவல் ஸ்வாமிக்கே உரியதாகவும்உள்ளதாகவும் உலகிற்காண்கிறோமாதலால் இந்தநியாயமேயாகும் இங்கும். ஆனால் ஜீவாத்மாவாகிற இந்தஸொத்து சைதந்யமாகிற கல்மஷத்தோடும் கூடி யிருக்கையாலே சிறிது தலையாட்டவும் வாலாட்டவும் பெறுகிறது. தன்னை நன்றாக வுணரும்போது தலைமடிந்து நிற்கிறது. நிலாத் தென்றல் சந்தனம் புஷ்பம் முதலியன போலே ஸர்வாத்மநா பரதந்திரமாயிருக்கவேண்டிய ஜீவாத்மாவுக்கு சைதந்யமே இடையூறாக நிற்றலால் இதைக் கல்மஷமென்கிறது.

சேதநன் தான் எம்பெருமானைப் பற்றுவதானது ஸ்வகத ஸ்வீகார மென்றும், எம்பெருமான் தானே சேதநனை வரிப்பதானது பரகத ஸ்வீகாரமென்றும் சொல்லப்படுகிறது. அடைவே மர்க்கட கிசோர ந்யாயமென்றும் மார்ஜார கிசோர ந்யாயமென்றும் வழங்குவர். பரகத ஸ்வீகாரமென்பதன் சுவையை அறியப் பெறாதவர்கள் 'இது அஸம்பிரதாயப் பேச்சு' என்பர். அது கிடக்க,

## கீதா பாஷ்ய ஸ்ரீஸூக்தி காண்மின்.

கீதா பாஷ்யத்தில் எம்பெருமானுர் தெரிவித்தருளின மஹார்த்தம் இது. அதில் எட்டாவது அத்யாயத்தில் பதினன்காவது ச்லோகம்- *[அநந்யசேதாஸ் ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யச:, தஸ்யாஹம் ஸுலப: பார்த்த! நித்யயுக்தஸ்ய யோகிந:*] 'ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்' என்று பகவான் தான் தனக்கு உயிர் நிலையாகக் கொண்டாடும் ஞானியானவன் தன்னை உபாஸிக்க வேண்டியபடியையும் பேறு பெறும் பரிசையும் இனி யருளிச்செய்கிருன் கண்ணபிரான் என்று அவதாரிகையிட்டு சுலோகத்தை வெகு அழகாக வியாக்கியானித்தருளியுள்ளார் ஸ்ரீபாஷ்யகாரர். இந்த சுலோகத்தின் கருத்து என்னவென்ருல், அர்ஜுநா! எவன் இடைவிடாமல் எப்போதும் வேருென்றிலும் நெஞ்சைச் செலுத்தாதவனுய் என்னையே ஸ்மரிக்கிருனே, என்னேடு நித்யஸம்ச்லேஷத்தை விரும்பியிருக்கின்ற அந்த பக்தனுக்கு நான் ஸுலபன்—என்பதேயாம்.

இதில் (தஸ்யாஹம் ஸுலப:) அவனுக்கு நான் எளியன் என்கிற பகுதிக்கு பாஷ்யம் செய்தருளியிருக்கின்ற அழகை என்சொல்வோம்! அவ்விடத்து பாஷ்யபங்க்திகளின் பொருளாவது—என்னேடு எப்போதும் கூடியிருக்க வேணுமென்கிற விருப்பமுடையவனுக்கு அடையத் தகுந்தவன் நானே யாகிறேன். மிக எளிதாக அடையத் தகுந்தவனுமாகிறேன் நான்; (அதாவது) அவனுடைய பிரிவைப் பொறுக்கமாட்டாதவனுய் (அவனைப் பிரிந்து தரித்திருக்கமாட்டாதவனுய்) நானே அவனை வரிக்கிறேன். என்னையடைவதற்கான உபாஸனத்தின் பரிபக்குவ நிலைமையையும் அதற்குற்ற இடையூறுகள் நீங்குதலையும் என்னிடத்தில் அதிகமான ப்ரீதி முதலியவைகளையும் நானே கொடுக்கிறேன். *நாயமாத்மா ச்ருதியில் இவ்வர்த்தம் ப்ரஸித்தமாயிருப்பதோடு இந்த கீதையிலேயே மேலே பத்தாவது அத்தியாயத்தில் 10, 11 சுலோகங்களாலும் சொல்லப்படுகிறது—என்பதாம். ஸத்ஸம்பிரதாய ஸாரார்த்தம் இங்கே பொதிந்திருக்குமழகு காண்க.

## ஸ்ரீ வசனபூஷண ஸூக்தி விசேஷம்

ஸ்ரீவசநபூஷணத்தில் 142, 143 "இவன் அவனைப் பெற நினைக்கும்போது .......பாதகமும் விலக்கன்று" என்று அருளிச்செய்த விடத்தில் வியாக்கியானத்தில் மணவாள மாமுனிகள்—"உடைமையை உடையவன் சென்று கைக்கொள்ளுமா போலே ஸ்வாமியான அவன் தானேவந்து அங்கீகரிக்கக் கண்டிருக்கக்கடவ பரதந்த்ரனான இச்சேதநன் தான் பலியாய் தன் ஸ்வீகாரத்தாலே ஸ்வதந்த்ரனான அவனைப்பெற நினைக்குமளவில், அவன்நினைவு கூடாதாகில் இப்படி விலக்ஷணையாயிருக்கிற ப்ரபத்தியும் தல்லாபஸாதநமாகாதென்ற படி ............ ஸ்வாமியாய் ஸ்வதந்த்ரனான அவன், ஸ்வம்மாய் பரதந்த்ரனாயிருக்கிற இவனை ஸ்வேச்சையாலே பெற நினைக்குமளவில் பாபங்களில் ப்ரதாநமாக எண்ணப்படும் பாதகமும் ப்ரதிபந்தகமாகமாட்டாதென்கை. இவை யிரண்டாலும் ஸ்வகதஸ்வீகாரா நுபாயத்வமும் பரகதஸ்வீகாரோபாயத்வமும் காட்டப்பட்டது". என்றருளிச்செய்திருக்கும் ஸ்ரீஸூக்திகள் மேலே காட்டிய கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்திகளையே அடியாகக்கொண்டவை என்று நன்கு புலப்படுகின்றது. மணவாளமாமுனிகள் முன்பு ஒரு வேஷத்தாலே கீதாபாஷ்யத்தில் வடமொழியாலே அருளிச்செய்ததைப் பின்பு மற்றொரு வேஷத்தாலே ஸ்ரீவசநபூஷண வியாக்கியானத்தில் தென்மொழியாலே அருளிச்செய்தாரென்று அறுதியிடத் தட்டில்லை.

## கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்தி விவரணம்

மேலே பொருள் விவரிக்கப்பெற்ற கீதாபாஷ்ய மூல ஸ்ரீஸூக்தியில் ஒவ்வொரு வாக்கியமும் ஸாரமானது. *தத்வியோகஅஸஹமாந: அஹமேவ தம் வ்ருணே* என்பது கீதாபாஷ்ய ஸூக்தி. ஞானியான சேதநனைப் பிரிந்திருப்பதை எம்பெருமான் தான் பொறுத்திருக்க மாட்டாதவனாய்த் தானே அந்த சேதநனை வரிப்பதாகக் கூறுகின்றவிதுதான் பரகத ஸ்வீகாரமென்பது. *மத்ப்ராப்த்யநுகுணோபாஸந விபாகம் அஹமேவ ததாமீத்யர்த்த:* என்கிற அடுத்த வாக்கியமானது ஸ்வகத ஸ்வீகாரப் பற்றுசை நன்றாகக் கழிக்கிறது. இத்தலையில் விளைவதெல்லாம் எம்பெருமானுடைய க்ருஷிபலமாக விளைகின்றதேயன்றி இவன் தலையாலே விளைவித்துக் கொள்ளுமது

ஒன்றுமில்லையென்கிற ஸத்ஸம்ப்ரதாய ஸாரார்த்தம் எவ்வகையான சோத்யத்திற்கும் இடமில்லாதபடி தெளிவிக்கப்பட்டது.

### தாத்பர்யசந்த்ரிகா ஸூக்தி விசேஷம்

இந்த இடத்தில் *நாயமாத்மா ச்ருதியையும் எடுத்துக் காட்டியருளுகிறார் ஸ்ரீபாஷ்யகாரர். பரகதஸ்வீகாரத்திற்கு அதுவே ப்ரமாணமென்று நிரூபிக்கிற முகத்தாலே பிறருடைய சிலபல வாதங்களையும் அகற்றினாராயிற்று. இவ்விடத்தில் தாத்பர்ய சந்த்ரிகையில் வேதாந்தவாசிரியர் அருளிச்செய்துள்ள திவ்ய ஸூக்திகளும் தெள்ளியவே. *உக்தஸ்ய அதிவாதமாத்ரத்வ சங்காவ்யுதாஸாய ச்ருதிமூலதா மாஹ-யமேவேதி* என்றருளிச் செய்திருப்பது ஆழ்ந்து நோக்கத்தக்கது.

இவ்விஷயத்தில் ஸாரமாகத் தெரிந்துகொள்ள வேண்டியது இவ்வளவே; *த்வத்பாதமூலம் சரணம் ப்ரபத்யே* என்றும் *புகலொன்றில்லா வடியேன் உன்னடிக் கீழமர்ந்து புகுந்தேனே* என்றும் சொல்லிக்கொண்டு (அதாவது நாம் பற்றுகிறோமாகக் காட்டிக்கொண்டு) திருவடிகளிலே விழுந்தாலும், 'இது நாம் பற்றின பற்றன்று; எம்பெருமான் தானே பற்றுவித்தானத்தனை; அவனுடைய க்ருஷி பலித்ததத்தனை' என்று உள்ளூர அநுஸந்திக்க ப்ராப்தம். இதையிட்டே பரகதஸ்வீகாரமென்கிறது. ''ஸ்வதத்தஸ்வதியா ஸ்வார்த்தம் ஸ்வஸ்மிந் ந்யஸ்யதி மாம் ஸ்வயம்'' என்கிற தேசிக ஸூக்திக்கு அர்த்தமில்லையோ?

### ஆளவந்தார்ஸ்ரீஸூக்தி ரஸாநுபவங்கள்

"பகவத் ப்ரவ்ருத்தி விரோதி ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தியே ப்ரபத்தி" யென்று நம் பூருவாசாரியர்கள் அருளிச்செய்ததானது பரம ஸித்தாந்தமானதொரு ஸூக்ஷ்மார்த்த விசேஷம். இது ஒருபுறமிருக்க, ''ஆத்ம ஸமர்ப்பணம் ப்ரபத்தி'' என்பது மொன்றுண்டு. 'எனதாவி தந்தொழிந்தேன்'' ''மேதாள்களையாரத் தழுவி யென்னுயிரை அறவிலை செய்தனன்'' என்று ஆழ்வாரும், *அஹம் அத்யைவ மயா ஸமர்ப்பித:* என்று ஆளவந்தாரும் அருளிச்செய்த கணக்கிலே ஆத்ம ஸமர்ப்பணத்தையும் ப்ரபத்தியாகக் கொள்ளக் கடவதாகையாலே இதுதன்னை நிரூபித்துப் பார்த்தால் இதை அபராதகோடியிலே எண்ணவேண்டுமென்பர் நம் ஆசிரியர்; அப்படிச் சொல்வது அபசாரமென்பர் பிறர்.

உண்மையில் இது அபராதகோடியிலேயே சொருகி நிற்கும். *எனதாவி தந்தொழிந்தேன்* என்றவுடனே அதற்கு அநுதபித்து "எனதாவி யார் யானார் தந்த நீ கொண்டாக்கினையே" என்று ஆழ்வார் அருளிச்செய்திருக்கையாலும், ஆளவந்தாரும் "அஹமத்யைவ மயா ஸமர்ப்பித:" என்றபின் "மம நாத! யதஸ்தி யோஸ்ம்யஹம் ஸகலம் தத்தி தவைவ மாதவ!, நியதஸ்வமிதி ப்ரபுத்ததீ: அதவா கிம் நு ஸமர்ப்பயாமி தே" என்று அநுதபித்து உண்மையை வெளியிட்டிருப்பதாலும், ஆத்ம ஸமர்ப்பணம் அபராதகோடியிலேயே சேரும். ஆளவந்தாருடைய திருவுள்ளத்தை நன்கு விவரிக்கிறோம் காண்மின்; "மயா அஹம் ஸமர்ப்பித:," என்று முந்துற ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணினதாக அருளிச்செய்தார். உடனே இப்படி சொல்வதற்கு எனக்கு என்ன அதிகாரமுளது? நான் என்கிற வஸ்துவும் என்னுடையது என்கிற ஒரு வஸ்துவும் ஸ்வதந்த்ரமாக வுண்டோ? "யானே நீ என்னுடைமையும் நீயே" என்றபடி ஏற்கனவே உன்னுடையதாகவே இருக்கும்போது, இந்த ஆத்ம வஸ்து உனக்கு இல்லாததுபோலவும் இப்போது தான் என்னால் புதிதாக ஸமர்ப்பிக்கப்படுவது போலவும் பேசிவிட்டேனே பாவியேன்; ஸமர்ப்பிப்பதற்கு நானார்? ஸமர்ப்பிக்க என்னிடம் என்ன இருக்கிறது? அதிலும் உனக்கு நான் ஸமர்ப்பிக்க என்ன வுண்டு? இவ்விஷயங்களை ஆராயாமல்தானே அவிவேகியாய் 'அஹமத்யைவ மயா ஸமர்ப்பித:' என்று பிசகாகப் பேசிவிட்டேனே! என்று அனுதாபங்காட்டி *மம நாத யதஸ்தீத்யாதியான அடுத்த ச்லோகம் அருளிச்செய்தார்.

## ஸ்ரீ வசனபூஷண ஸூக்தி ரஸங்கள்

இங்கு, கீழ்ச்லோகத்தில் ஆத்மஸமர்ப்பணம் பண்ணினதாகவும் அதைப்பற்றி இந்த ச்லோகத்தில் அநுதபித்ததாகவும் முடிந்தது. ஆகவே ஆத்ம ஸமர்ப்பணம் அபராத ரூபமென்றதாகிறது. (146) "ஸர்வாபராதங்களுக்கும் ப்ராயச்சித்தமான ப்ரபத்திதானும் அபராதகோடியிலேயாய் க்ஷாமணம்பண்ண வேண்டும்படி நில்லா நின்றதிறே. (147) நெடுநாள் அந்யபரையாய்ப்போந்த பார்யை லஜ்ஜா பயங்கள் இன்றிக்கே பர்த்ரு ஸகாசத்திலே வந்து நின்று என்னை யங்கீகரிக்க வேணுமென்று அபேக்ஷிக்குமாபோலே யிருப்பதொன்றிறே இவன் பண்ணும் ப்ரபத்தி" என்பன ஸ்ரீவசநபூஷண திவ்யஸூக்திகள். இங்கு

வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகளின் விவரணத்தை யநுபவித்துத் தெளிக.

நம்மாழ்வாரும் ஆளவந்தாரும் முன்னம் பண்ணின ஆத்ம ஸமர்ப்பணம் அபராத ரூபமென்று சொல்லுகிற பக்ஷத்தில், அநுதாப யோக்யங்களான பாபங்களைப் போலே ஆத்ம ஸமர்ப்பணமும் ஒரு பாபமாகவன்றோ தேறுகிறது; அது செய்யக் கூடாத காரியம் என்று ஏற்பட்டு விடாதா? இவ்விஷயம் ஆழ்வாருக்கும் ஆளவந்தார்க்கும் முன்னம் தெரியாமையில்லையே, தெரிந்து பாபத்தைப் பண்ணுவானேன்? பிறகு அநுதபிப்பானேன்? "ப்ரக்ஷாளநாத்தி பங்கஸ்ய தூராத் அஸ்பர்சநம் வரம்" = முன்பு சேற்றில் காலைவைத்துப் பின்பு அதை அலம்புவதைக் காட்டிலும் சேற்றில் காலை வைக்காமலே யிருந்துவிடலாமே—என்கிறாப்போலே ஆத்ம ஸமர்ப்பணமென்கிற பேச்சையே ப்ரஸ்தாவியாமலிருந்துவிடலாமே என்கிற வாதங்கள் இங்கு விளையக்கூடியதுண்டு.

இதற்கு ஸமாதானமாகப் பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்வது பாரீர்:—"[தே கிம்நு ஸமர்ப்பயாமி] இத்தையுடைய உனக்கு எத்தை ஸமர்ப்பிப்பேன்? ஸமர்ப்பணீய மேது? ஸமர்ப்பகர் ஆர்? ஸமர்ப்பணீயமாகைக்கு ஸ்வாம்யமில்லை. ஸமர்ப்பிக்கைக்கு ஸ்வாதந்த்ர்யமில்லை; ஸம்ஸார பீதியாலே ஸமர்ப்பிக்கையும் ஸ்வரூப யாதாத்ம்ய ஜ்ஞாநத்தாலே அநுசயிக்கையுமாக இரண்டும் யாவந் மோக்ஷம் அநுவர்த்திக்கக் கடவது" என்று. இதனால் தேறினது என்னவென்றால் ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணுகையும், அது பண்ணினதற்காகப் பிறகு அநுதாபம் காட்டுகையுமாகிற இரண்டும் சாஸ்த்ரார்த்தம் என்றதாகத் தேறிற்று.

"முந்துற ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணவேணும், பின்னை அநுதாபமும் படவேணும்" என்றால் இது நன்றாக இல்லையே. தப்பான காரியத்திற்கன்றோ அனுதபிக்க வேண்டுவது என்றே இன்னமும் பலருடைய நெஞ்சு தளும்பியேயிருக்கும், கேண்மின்; இந்த ஸ்தோத்ர ரத்னத்திலேயே கீழே முப்பத்திரண்டாவது ச்லோகம் முதற்கொண்டு நாற்பத்தாறும் ச்லோகமளவும் பதினான்கு ச்லோகங்களாலே எம்பெருமானுடைய நித்யகைங்கர்யத்தைப் பரமபுருஷார்த்தமாகப் பிரார்த்தித்த

ஆளவந்தார் தாமே அடுத்த (47) "திகசுசி மவிநீதம்" என்கிற ச்லோகத்தால் கீழே அப்படி பிரார்த்தித்ததற்கு மஹத்தான அனுதாபத்தை ஆவிஷ்கரித்திருக்கின்ருரென்பது அபரோக்ஷம்; இங்கு ஆராய வேண்டுமே. கைங்கர்ய ப்ரார்த்தனை கூடுமா கூடாதா? பவந்தமேவாநுசரந் நிரந்தரம்....கதாஹமைகாந்திகநித்யகிங்கர:* நித்யகிங்கரோ பவாநி* இத்யாதிகளை நோக்குமிடத்து கைங்கர்ய ப்ரார்த்தனை கூடுமென்று விளங்காநின்றது. "திகசுசி மவிநீதம்....தவ பரிஜநபாவம் காமயே காமவ்ருத்த:" என்றதனுல் அந்த கைங்கர்ய ப்ரார்த்தனைக்காக ஆத்ம கர்ஹை செய்துகொண்டதை நோக்குமிடத்து கைங்கர்ய ப்ரார்த்தனை கூடாதென்றே விளங்காநின்றது. வேதாந்தவாசிரியருங்கூட "த்வத் கிங்கரத்வ விபவே ஸ்ப்ருஹயா அபராத்யந்" என்று கைங்கர்ய ப்ரார்த்தனைக்குப் பூர்வபாவியான கைங்கர்ய ருசியையுங்கூட அபராத கோடியிலே வைத்துப் பேசியுள்ளார். அங்ஙனம் பேசினவர் தாமே கைங்கர்ய ப்ரார்த்தனையையும் பல பல ச்லோகங்களாலே செய்தருளியிருக்கின்ருர். இவை பரஸ்பர விருத்தங்களாகத் தோன்றவில்லையா?

உண்மையில் இரண்டும் சாஸ்த்ரார்த்தமேயென்று நிஷ்கர்ஷித்தாலொழிய வழியில்லையன்ருே. கைங்கர்ய ப்ரார்த்தனையும் பண்ண வேணும்; 'ஸார்வபௌமனை நீசப்பெண் ஆசைப்படுமாபோலே ஐயோ! என்ன ஆசைப்பட்டோம்! இது தகுமா?' என்று உடனே நெஞ்சாறல் படவும் வேணும் என்று சாஸ்ரார்த்தம் சிக்ஷிதமாகிறது. *ஒட்டுரைத்திவ்வுலகுன்னைப் புகழ்வெல்லாம் பெரும்பாலும் பட்டுரையாய்ப் புற்கென்றே காட்டுமால் பரஞ்சோதீ* (திருவாய்மொழி (3-1-2) என்று, பரஞ்சோதியான எம்பெருமானுக்கு உலகத்திலுள்ள க்ஷணபங்குரமான தாமரை, மேகம் காயாம்பூ முதலானவற்றை ஒப்பாகச் சொல்லுதல் இழிவு என்கிருராழ்வார். இஃது உண்மையா அன்ரு? உண்மையாகில் 'கொண்டல் வண்ணா! கடல் வண்ணா? காயா வண்ணா! என்று பல காலும் ஆழ்வார்கள் கதறுகிருர்களே, இது என்ன? என்று ஆராய வேண்டாவோ? அன்றியும், பெரிய திருவந்தாதியில் *புகழ்வோம் பழிப்போம்* என்று எம்பெருமானை நாம் புகழ்வதானது பழிப்பதேயாகுமென்கிருர் நம்மாழ்வார். இப்படிச்சொல்லிக்கொண்டே மேன்மேலும் எம்பெருமானைப் புகழ்வதற்கே ஒருப்படுகின்ருரே, இது என்ன? என்று இதையும் ஆராயவேண்டாவோ?

(தொடரும்)

— ஸ்ரீ: —

# மாசிமாதத்தில் குலசேகராழ்வாரனுபவமும் திருக்கச்சிநம்பிகளனுபவமும் சிறக்கும்

குலசேகராழ்வார் மாசிப் புனர்பூசமெனும் நன்னாளில் அவதரித்தார். இவருடைய அருளிச்செயலான பெருமாள் திருமொழியில் இன்னமுதமான பாசுரம் ×அரசமர்ந்தானடிசூடுமரசையல்லால் அரசாக வெண்ணேன் மற்றரசுதானே× என்பது என்மனத்திற்பட்டது. தசரத மன்னவன் வனம்புக்க மகனைநோக்கி ×நின்னையே மகனைப் பெறப் பெறுவேன் ஏழ்பிறப்பும் நெடுந்தோள் வேந்தே!× என்றது மற்று யாரும் சொல்லாத சொல்லாகும். ×வா போகு வா வின்னம்வந்தொருகால் கண்டுபோ× என்று இராமனை நோக்கித் தயரதன் கூறுவதாக ஒருபாசுரம் பெருமாள்திருமொழியிலுள்ளது(9-4). ×வா போகு வா இன்னம் வந்தொருகால் கண்டுபோ× என்பது அற்புதமான அநுபவம். சக்ரவர்த்தி இராமனை வா என்றழைப்பனும்; உடனே அவன் வருவன்; வந்தவுடனே 'ராமா! போ' என்பனும் மன்னவன். இராமன் உடனே போய்விடுவன். மறுபடியும் சக்ரவர்த்தி 'ராமா! வா' என்பனும். உடனே இராமன் திரும்பிவருவனும். இப்படி வாவென்பதும் போவென்பதுமாகப் பன்முறையும் நடைபெறுமாம். அப்பா! எதற்காக வரச்சொல்லுகிருய்? எதற்காகப் போகச்சொல்லுகிருய்? என்று கேளான் இராமன். ×வா போகு வா போகு× என்று சொல்லுகிற சக்ரவர்த்தியின் கருத்து யாதெனில், முன்னழகைக் காண்பதற்கு வா வென்பன். அது கண்டவாறே பின்னழகைக் காண்பதற்குப் போவென்பன். ×முன்னிலும் பின்னழகிய பெருமாளன்ரே. மறுபடியும் முன்னழகு காணவேண்டி வா வென்பன். எத்தனை தடவை கண்டாலும் சக்ரவர்த்திக்கு த்ருப்தி பிறவாது. வால்மீகி பகவான் ×ந ததர்ப்ப ஸமாயாந்தம் பச்யமாநோ நராதிப:× என்ருர். ... ×

## திருக்கச்சிநம்பிகளாறுவரர்த்தை

மாசி மிருகசீர்ஷத்தில் அவதரித்தவர் திருக்கச்சிநம்பிகள். இவர்க்கு ×ராமாநுஜமுநேர் மாந்யம்× என்கிற விசேஷணம் அற்புதமா

னது. இவர் தேவப்பெருமாளிடம் ஆறு வார்த்தைகள் பெற்று உடைய வர்க்கு உரைத்தாரென்பது இவருடைய ஏற்றத்தைக் காட்டும். ஸ்ரீ காஞ்சீ பூர்ணமிச்ரேண ப்ரீத்யா ஸர்வாபிபாஷிணே, அதீதார்ச்சா வ்ய வஸ்தாய ஹஸ்த்யத்ரீசாய மங்களம்* என்றருளிச்செய்தார் மணவாள மாமுனிகளும்.

ஆறுவார்த்தைகளாவன *அஹமேவ பரம்தத்வம் தர்சநம் பேத ஏவ ச, மோக்ஷோபாய: ப்ரபத்திஸ் ஸ்யாத் பூர்ணாசார்ய ஸமாச்ரய:, தேஹாவஸாநே முக்திஸ் ஸ்யாத் அந்திமஸ்ம்ருதி வர்ஜநம்* என்கிற ஸுப்ரஸித்தமான ப்ராசீந ச்லோகத்திலே விசதம். இதையடியொற்றிப் புராதந கவியாகிய வடிவழகியநம்பி தாஸர் பணித்த பாசுரங்கள் இரண்டு

*செப்புகின்ற பரதத்வம் யானேயென்னச் செப்புதி, வே-*
*றொப்பிலாதாய்! தரிசனமும் பேதமென்றே யுரைத்திடுக*
*தப்பிலாதவுபாயமதும் ப்ரபத்தி யென்றே சாற்றிடுக*
*அப்ப! புகல்க இவையன்றி நினைவும் வேண்டா அந்திமத்தில்:*

*இந்தச்சரீர அவசானந்தன்னிலிசையும் மோக்கமது*
*அந்தமில்லாக் குணத்தினனுக்கு ஆசாரியனும் பெரியநம்பி*
*சிந்தைதன்னுளிவை யெல்லாம் சிந்தித்திருந்தானிளையாழ்வான்*
*முந்தியிவைநீ மொழியென்று மொழிந்தருள்வா னருளாளன்''.*

தேனும்பாலுமமுது மொத்த இவ்விரண்டு பாசுரங்களையும் நித்யாநுஸந்தானம் செய்வது ப்ரபந்நர்களுக்கு மிகவும் பாங்கானது.

## ஸமுத்போதநமே யல்லது தோஷோத்பாவநமன்று

இன்று (20—2—80) ஸ்ரீ ராமாநுஜனுக்கு வியாஸ மெழுதத் தொடங்குகையில் ஸ்ரீ ரங்கநாதபாதுகா பத்திரிகையின் மாசி மாதத்திதழ் ப்ராப்தமாயிற்று. ஆச்ரமச் செய்திகளை ஆனந்தவெள்ளம் பெருக அநு பவித்தான பின்பு ஸ்ரீ உப. வே. மதுராந்தகம் வீரராகவாசார்ய ஸ்வாமி யின் ''**தூய்ய குலசேகரன்**'' என்னும் மகுடம் புனைந்த கட்டுரை யை ஸேவிக்கத் தொடங்கினேன். சில வரிகளை ஸேவித்தவுடனே ''இந்த வியாஸத்தை அந்த ஸ்வாமி திருக்கண் வளர்ந்துகொண்டே எழுதியருளினரா?'' என்று எண்ணலாயிற்று. ''இந்த வியாஸத்தை

மேற்கொண்டுவாசியாமல் இவ்வளவோடு நிறுத்திக்கொள்வோம்;இதைப் பற்றி விமர்சிக்கப் புகுந்து வீண் காலக்ஷேபம் பண்ணுவதையும் விட்டிடுவோம்'' என்றும் தோன்றிற்று. வெகு நாழிகை ஆலோசித்தேன். மேலே இக்கட்டுரையின் மகுடத்தை மீண்டும் வாசித்துப்பாருங்கள். 'ஸமுத்போதநமேயல்லதுதோஷோத்பாவநமன்று' என்றெழுதமுடிவாகத் தோன்றினபடியாலும், ''விவக்ஷிதம் ஹி அநுக்தம் ஆகுலீகரோதி ஹ்ருதயம்'' என்கிற காளிதாஸஸுபாஷிதம் நினைவுக்கு வந்தபடியாலும் விவக்ஷிதங்களை விஜ்ஞாபித்தே தீருகிறேன். இத்தகைய விஷயங்களை அடியேன் ஸமயவிசேஷங்களில் ஸ்ரீமதாண்டவன் ஸன்னிதியிலேயே விஜ்ஞாபநபத்ர மூலமாக விண்ணப்பம் செய்து க்ருதக்ருத்யனுவதுண்டு; ''இனி நானேநேரில் கவனிக்கிறேன்'' என்னுமருள்மொழியைப் பெற்று அதை ஸ்ரீராமாநுஜனில் வெளியிட்டிருப்பதுமுண்டு. இதி அலம்அவதரணிகயா.

**விவக்ஷிதம் விஜ்ஞாப்யதே.** முக்கியமான விஷயம்; ''துய்ய குலசேகரன்'' என்ற மகுடத்திற்குச் சேர, ஸ்ரீகுலசேகராழ்வாரைப்பற்றி யெழுதுவது இந்த ஸ்வாமிக்கு உத்தேச்யம். எழுதுகிருர்—''குருபரம்பராஸாரத்திலே 1. பொய்கைமுனி, 2. பூதத்தார், 3. பேயாழ்வார், 4. தண்பொருநல்வருங்**குலசேகரன்**, 5. விட்டுசித்தன், 6. துய்ய குலசேகரன்......''என்று; இந்த வாக்கியத்தில் (தாமிரபர்ணீதீரத்தில் அவதரித்தருளின குலசேகராழ்வார்) என்று ஒருமுறையும், துய்ய **குலசேகரன்** என்று மற்ரெரு முறையுமுள்ளது. இது அச்சுப்பிழையென்னவொண்ணுதபடி அடுத்த வாக்ய ச்ரேணியில்—

*''நான்காவது அவதாரம்—மழிசை வந்த சோதி;*
*ஐந்தாவது—தண்பொருநல்வருங்குலசேகரன்;*
*ஆறுவது—துய்ய குலசேகரன்;............''*

என்றுள்ளது. இதைப்பற்றி என்ன நினைப்பது! என்ன சொல்லுவது! என்றே தோன்றவில்லை. ஏதோ வொருவகையில் பிறரிடம் சிக்கிக் கொண்டுதிணறவேணுமென்றுராசிபலன் இருக்கும்போலும். நம்மாழ்வார் ப்ரபந்நஜநகூடஸ்தராகையாலே அதையிட்டு அவரையுங் குலசேகரராக தேசிகன் திருவுள்ளம்பற்றினுர் என்று சொல்லக்கூடும். ×தண்பொருநல்லருங்குலசேகரன்× எனப் பாடத்தைமாற்றினுல் யாப்பிலக்கணத்துக்குச் சேராதே. காய்ச்சீருக்குக் கனிச்சீராகுமே. கனிச்சீர்பயிலாத யாப்பி

லன்றோ செய்யுள் அமைந்துள்ளது. மருமத்தை அவர் தாமே வெளியிட்டருளினால் நன்று. ''இரண்டு தடவையிலும் குருகேசனைக் குலசேகரராக மருண்டேனந்தோ'' என்று உண்மை தெரிவித்து நிற்பது உசிதம்.

ப்ரஸங்காத் சில தத்துவங்களை இவர்க்கும் உலகுக்கும் உணர்த்துகிறேன். ''மஹா போத்ரீந்'' ''விஸூக்ஷிதமன்று'' ''திவ்யப்ரபந்தங்கள் அருளிய சூர்மத்திலே'' மகிழ்மாறன் – பூதம் ஸரஸிய – ப்ரதோஸ்மி— அவிச்சந்ந......இவைபோன்ற எண்ணிறந்த அச்சுப்பிழைகளிலே கண் செலுத்தாமல் திருத்தவேண்டிய முக்கியமானபிழைகளை ஸ்ரீமதாண்டவன் திருவுள்ளமுமுகக்கும்படியாகத் திருத்தி உபகரிக்கிறேன். நண்பர் தமது வியாஸத்தின் உபக்ரமத்தில் ''இச்சாமீந! விஹாரகச்சப!'' இத்யாதி தசாவதாரஸ்தோத்ர ச்லோகத்தை உதாஹரித்து உரையிடுகிறார். இதில் மூன்றாவது பாதம் ''கல்கிவாஹந தசாகல்கிந்'' என்று குறிக்கப்பட்டுள்ளது. இங்கு ஸமாஸம் எப்படி யென்று கேட்டால் விடை தருவது சிரமமேயாகும். மூளையைக் குழப்பிக்குழப்பிப் பார்க்கட்டும். இங்கு அடியேனுடைய வியாக்கியான பங்க்திகளை உதாஹரிக்கிறேன்—

''(கல்கவாஹந!) கல்கமென்று வெண்குதிரைக்குப் பெயராதலால் அதனை ஊர்தியாகக்கொண்டு அவதரிக்கப்போகிற பெருமானே! என்கை. (தசாகல்பிந்!) ×ஆகல்பவேஷௌ நேபத்த்யம் ப்ரதிகர்ம ப்ரஸாதநம்× என்கிற அமரகோசத்தின்படியே ஆகல்பமென்று வேஷத்தைச் சொல்லுகிறது. மத்ஸ்யாதிகளான பத்து வேஷங்களைப் பூண்டுகொள்பவனே! என்றபடி. சிலர் ''தசாகல்கிந்!'' என்று பாடங்கொண்டு (கல்கிவாஹந தசாகல்கிந்) என்று ஏக பதமாக வைத்து ஏதோ பொருள் கூறுவர்; அது யதாவஸ்தித பாடம் தெரியாமையினலத்தனையென்று கொள்ளக் கடவது. அது தவறான பாடமேயாதலால் தவிர்க்கத்தக்கது.''

ஆக இவ்வளவும் உலகம் பரவிய அடியேனுடைய வியாக்கியான பங்க்திகள். மதுராந்தகம் ஸ்வாமி தமது தவறான பாடத்தை மாற்றிக்கொள்ள முயல்கிறாரா? தமது பாடத்தையே ஸ்தாபிக்க நினைக்கிறாரா? என்பது தெரியவேணும். ×மௌநம் ஸர்வார்த்தஸாதகம்× ஆனாலும் ஆகலாம். இனி, மேல் விஷயங் கேண்மின்; நமது நண்பருடைய வாக்கியங்களில் இதுவுமொன்று;— (அதாவது)

''ஆழ்வார் பதின்மர் என்பது மதுரகவிகளை நம்மாழ்வாருடன் அந்தர்பவித்து:'' என்பது. இதில் இரண்டு திருத்தங்களை இவர் செய்துகொள்ளவேணும். **நம்மாழ்வாரில்** என்னலாமேயொழிய (நம்மாழ்வாருடன்) என்னலாகாது. அந்தர்ப்பவிப்பித்து என்று [ணிஜந்தமாக] பிரயோகிக்கலாமே யொழிய, அந்தர் பவித்து என்னலாகாது. வடமொழியில் (அந்தர்ப்பூய) என்பதற்கும், (அந்தர்ப் பாவ்ய) என்பதற்கும் வாசியில்லையா? மதுரகவி: சடகோபமுநௌ அந்தர்ப்பவதி; மதுரகவிம் சடகோபமுநௌ அந்தர்ப்பாவயந்தி, என்பர் வடமொழியில் தேர்ச்சி பெற்றவர்கள். ''மதுரகவிம் சடகோபமுநிநா ஸஹ அந்தர்ப்பவந்தி'' என்றால் ஹஸேயு:.

சிலரோபலரோ ஒன்றுநினைக்கலாம், கேட்கலாம்;—''உலகில் பத்ரிகைகள் ஆயிரவர்க்கோ பதினாயிரவர்க்கோ போகக்கூடும். ஒரு நூறு வித்வான்களாவது அதை ஊன்றி வாசிக்கக்கூடும்; அவர்களெல்லாரும் வாளாகிடக்க, உமக்குமட்டும் ஏன் இந்த ப்ரவ்ருத்தி? என்று. இப்படி நினைக்கவேண்டியதும் வினவவேண்டியதும் அவசியமே; ''பல பத்திரிகைகளில் பலவித்வான்கள் நிரவத்யமாயும் அதிஹ்ருத்ய மாயும் சாஸ்த்ரார்த்தங்களையெழுதி வெளியிடாநிற்க, இவரேன்......?'' என்று நாமும் கேட்கலாமன்றோ. கட்டுரையின் முடிவில்—'' இவர் (என்றைக்கோ சுக்லத்வாதசியில் அவதரித்தார்; இவ்வருஷம் சுக்லத்வாதசியும் அமைந்துளது'' என்று அபூர்வ மஹார்த்தமொன்று கண்டுபிடித்தெழுதியுள்ளார். இது மிக வியப்பே. அறுபது வருஷப் பஞ்சாங்கங்களுமிருக்குமே; இப்படி கூடாகவாண்டு கள் எத்தனையுளவென்று கண்டுபிடித்தருள்வரா? ''சுக்லபக்ஷத்வாதசியோடு புநர்வஸுவும் கூடினதும் ஒரு ஆச்சரியம்— என்று மெழுதலாமே.

கடைசியாக ஒரு சுலோகம் ஸாதிக்கிறார்;

உத்தரார்த்தம்—''ஸ்ரீவீரராகவாசார்— யஸ்வயமநுபூய அந்வபாவயச்சாந்யாந்'' என்றுள்ளது. திருவாய்மொழியில் ×குப்பை கிளர்த்தன்ன× என்றவிடத்து ஓர் அரும்பதவுரையிலுள்ள வாக்கியத்தை நினைத்து நிறுத்துகிறேனிக் கட்டுரையை.

## இதையுங் காண்மின்

ப்ரஸ்துத பாதுகா ஸஞ்சிகையிலே **''வேதக் கதைகள்''** என்ற மகுடத்தின் கீழ் (மதுராந்தகம் ஈச்சம்பாடி ஸ்ரீ உவே. ஆருவமுதா சார், திருமலை) எழுதியதாக ஒரு கட்டுரை வெளிவந்துள்ளது. இதைப் பற்றி இங்கு நாம் எழுதுவதும் ஸமுத்போதனமேயல்லது வேறன்று. ப்ரஸித்தரான நம் மதுராந்தகவித்வான் பாசுரங்களிலே விபர்யாஸங்களை விளைவிக்கிறார்; இந்த மதுராந்தகாசாரியர் வேதவாக்கியங்களை மிகமிக விகாரப்படுத்தியுள்ளார். முதன்முதலாகத் தம் திருநாமத்தையே விகாரப்

படுத்தியுள்ளார். ஆராவமுதை ஆறாவமுதாக்கியிருப்பது சோசநீயமான விபர்யயம். இதிலிருந்து அடியேனுக்கு ஒரு பழங்கதை நினைவுக்கு வருகிறது. ஐம்பது வருடங்கட்கு முன்பு சிங்கப்பெருமாள் கோயிலிலிருந்து ஒரு ஸ்வாமி தம் குமாரனை நமது பாடசாலையில் சேர்த்திருந்தார். அவனுக்கு ஆராவமுதனென்று பெயர். ஒரு ஸமயம் அவனது பிதா அவனைக் காண வந்திருந்தார்; ''ஸ்வாமிந்! இவனுக்கு ஆராவமுதனென்று பெயரிட்டிருக்கிறீரே, இவன் திருக்குடந்தையில் பிறந்தானா என்ன?'' என்று கேட்டேன்; ''இல்லையில்லை; ஐந்து பெண்பசங்களுக்குப் பிறகு இவன் ஆறாவதாகப் பிறந்தான்; அதனால் ஆறாவது ஆறாவது என்றே சொல்லிவருகிறோம்'' என்றார். அதுகேட்ட அடியேனுக்கும் அருகிலிருந்தவர்களுக்கும் சிரிப்பு அடங்கவேயில்லை. ராமஸ்வாமியென்று பெயருடையவர்கள் பெரும்பாலும் றாமஸ்வாமியென்றே எழுதிக் கொள்வது வழக்கம். அப்படியே இவர்க்கும் ஆறா என்றே வழக்கம் போலும். இந்த வர்ணவிபர்யயம் கிடக்கட்டும். தமது கட்டுரையில் வேதவாக்கியங்கள் பலவற்றையும் உதாஹரிக்கிறார். அவற்றை தேவநாகராக்ஷரத்தில் அச்சிடுவித்திருக்கிறார். பல ஸம்ஸ்க்ருதபதங்களைப் போலே அவற்றையும் தமிழ் லிபியிலேயே எழுதிக்கொடுத்து அச்சிடுவித்திருக்கலாம். அஸஹ்யமான விபர்யயங்களைக்கண்டு மனம் கொதிக்கிறது. வைதிக வர்ண விபர்யயங்களை ஸ்வல்பமே காட்டுகிறேன்.

தைத்திரீய ஸம்ஹிதையில் (4-2-5) ''அஸூந்வந்தமயஜமாநமிச்ச ஸ்தேநஸ்யேத்யாம் தஸ்கரஸ்யாந்வேஷி'' = **இத்யா** என்பது ஆகாராந்தமான வொரு வைதிகபதம். இங்குச்செய்தவிபர்யயம் கிடக்கட்டும். அடுத்த வாக்யத்தில் ×அந்யமஸ்மதிச்ச ஸா த இத்யா× என்பதில் ×**அந்யமஸ்மதிச்ச**× = ×**நமோ** தேவி! என்பது ×நயோ தேவியாயிற்று ×கஸ்த்தா யுநக்**தி** ஸத்வா யுநக்**து**× இத்யாதிகளான விபர்யயங்கள் எண்ணிறந்தவை. ஸங்கல்பஸூர்யோதயத்திலே ஸ்வாமி ''தோஷாநுசிந்தநார்த்தா ஸ்ம்ருதிரபி தூரீகரோதி வைராக்யம்× என்று ஸாதித்த கணக்கிலே இந்த தோஷாநுவாதமும் பாதகமென்று நினைக்கிறேன். இங்ஙனம் பிழைபட அச்சிடுவிப்பதனால் யாருக்கும் பயனில்லையே. ''கராப்தஸ்ய ..... ஸ்ரீமந்நாராயணசவ'' — இது என்ன சாவமோ!

இவரெழுதும் தமிழ் வாசகங்களினற்புதத்தையும் காட்டுகிறேன். கட்டுரை தொடங்கும்போதே ''கர்மாக்கள் இருவகைப்படும்: அவை

ஒன்று நித்யம் மற்றொன்று காம்யம். நித்யம் என்றால் ப்ராணன் இருக்கிறவரையில் கட்டாயம் செய்யவேண்டியவை; அவைகளை செய்யாவிட்டால் தெய்வத்துக்கு வருத்தமுண்டாகும்'' என்றெழுதியுள்ளார். இவர் கண்ட தரும சாஸ்த்ரத்தில் நைமித்திகம் தலைகாட்டவேயில்லைபோலும். அவற்றைச் செய்யாது விட்டிட்டால் தெய்வத்துக்கு வருத்தமுண்டாகாது போலும். வேதவாக்கியங்களும் தம்முடைய வார்த்தைகளும் தனிப்படத் தெரியாதபடி கலந்தகட்டியாகக் குழப்பியிருப்பது லேகந ப்ரவ்ருத்தியின் புதுமையைக் காட்டுகிறது. **ஸ வா ஏஷ........ இதிச்ருத்யா வஹித**'' என்கிற தேவநாகராக்ஷர பங்க்திபோன்றவற்றால் என்ன உணர்த்தப்படுகிற தென்றே தெரியவில்லை. அச்சிடுவதற்கும் அச்சுத்தாள் ஸம்பாதிப்பதற்கும் கஷ்டமான இக்காலத்தில் விஷயங்கள் ஒழுங்கான முறையில் வெளிவர முயல்வது நலமல்லவா? இவை கிடக்கட்டும். முக்கியமாக ஒன்றுணர்த்துகிறேன்.

கருமம், கருமங்கள் என்னாமல், கர்மாவை - கர்மாக்களை என்பது அவைஷ்ணவர்களின் வழக்கு. ''கருமமும் கருமபலனுமாகிய''— ''கருமங் கடைப்படுமின் கண்டீர் × கண்டாயே நெஞ்சே! கருமங்கள் வாய்க்கின்று'' இவைபோன்ற அருளிச்செயல்களை உணரவேணும். ''தர்ம சப்தம்போலே கர்ம(ந்) சப்தம் அகாராந்தமன்றோ'' என்பவர்கள் ''நித்ய கர்மங்களையும் நைமித்திக கர்மங்களையும்'' இத்யாதி ஸ்ரீஸூக்தி ஸமலங்க்ருதங்களான ஸ்ரீதேசிகரஹஸ்யாதிகளை ஸேவிப்பது.

''என்ப**தை** வேதத்தில் கூறப்பட்டுள்ளது'' என்றித்தகைய வாக்கியங்களைப் பத்ரிகா நிர்வாஹகர்களாவது செவ்வைப்படுத்துவது நலம். ''ந சாஸ்த்ரஜ்ஞாநம் ந ச வேதஜ்ஞானம் கவித்வதா நாஸ்தி குதஸ்தி ப்ரஜ்ஞா, ததாபி ப்ரேமேண ப்ருவாமி ச்லோகம் ச்ரோத்ரப்புடத் தோஷகரம் ந்ருணாநாம்'' இத்யாதி ச்லோகங்களும் உலகில் நடையாடுகின்றனவென்று ஒருவாறு ஸமாஹிதராவோம்.

இவர் தமது கட்டுரைக்கு **''வேதக் கதைகள்''** என மகுடமிட்டிருப்பதால், வேதத்தில் இனிமையாக ஓதப்பட்டிருக்கும் பலபல கதைகளில் சிலவற்றை யெடுத்தெழுதி வாசகர்களை மகிழ்விக்கத் தொடங்குகிறார்போலும் என்று நினைத்தேன்; அக்கதை யொன்றுமில்லை.

அதீதவேதராயும் ஸம்ஸ்க்ருதஜ்ஞராயுமிருக்கிற இவர்க்கு வேத கதை யொன்றை நினைவூட்டி ஒரு ஜிஜ்ஞாஸையையும் விஜ்ஞாபிக்கிறேன். இப்போது தமது கட்டுரையின் முடிவில் (தொடரும்) என்றெழுதிவிட்டிருப்பதால் தொடர்ந்துவரும் கட்டுரைகளில் எமது ஜிஜ்ஞாஸையை ப்ரசமநம் செய்யவேணும் என்று பிரார்த்திக்கிறபடி.

தைத்திரீய ஸம்ஹிதையில் இரண்டாவது காண்டத்தில் ஐந்தாவது ப்ரச்நத்தில் விச்வரூபாநுவாகத்தில்—தேவேந்திரன் விச்வரூபனது மூன்று தலைகளைத் தனது வச்சிரப்படையினால் அறுத்திட்டதாகவும், அதனால் ப்ரஹ்மஹத்யாபாபங்கொண்டு அதைப் போக்கிக்கொள்ள இந்நிலவுலகத்தேவந்து, பூமிதேவி, வநஸ்பதிகள், ஸ்த்ரீஸமூஹம் ஆகிய மூவிடங்களிலே ப்ரஹ்மஹத்யையை மூன்று பங்காக்கித் தொலைத்திட்டதாகவும் சொல்லி, ஸ்த்ரீகளிடம் தொலைக்கப்பட்ட ப்ரஹ்மஹத்யாபாகத்தைப்பற்றி மேலே விரிவாகச் சொல்லுகையில்—

**"ஸா மலவத்வாஸா அபவத் தஸ்மாந் மலவத்வாஸஸா ந ஸம்வதேத ந ஸஹாஸீத நாஸ்யா அந்நமத்யாத்"** —ப்ரஹ்மஹத்யையின் ஒரு பங்கை ஏற்றுக்கொண்டதன் பலனை மாதர்களுக்கு ரஜஸ்வலாதோஷம் ஏற்பட்டதாகவும், அதனால் ரஜஸ்வலையோடு பேசவோ உடனிருக்கவோ அவளுடைய சோற்றை உண்ணவோ கூடாதென்றுகூறி, அதன்மேல் ''அதோ கல்வாஹு:'' என்று பக்ஷாந்தரமொன்று சொல்லத் தொடங்கி, ''அப்யஞ்ஜநம் வாவ ஸ்த்ரியா அந்நம், அப்யஞ்ஜநமேவ ந ப்ரதிக்ருஹ்யம் காமமந்யத்:'' என்றோதப்பட்டது. பாஷ்யாநுக்ருஹீதமான இதன் பொருள் யாதெனில்; கீழே **நாஸ்யா அந்நமத்யாத்** என்று நிஷேதித்தவிடத்து அந்நசப்தார்த்தம் அப்யஞ்ஜநமேயொழிய வேறன்று; ரஜஸ்வலையினிடத்து அப்யஞ்ஜநம் கொள்ளக்கூடாதே யல்லது ஸத்யாம் இச்சாயாம் அன்னம் கொள்ளலாம் என்று; இப்படியொரு பக்ஷமுள்ளதாகச் சொல்லி முடித்தது. இந்த வாக்யத்திற்கு இதுவே அர்த்தமா? வேறு அர்த்தமிருந்தால், அதை ஆர்ஜவத்துடன் வெளியிட்டு நண்பர் நம்முடைய மருளை நீக்கட்டும். இதுவே பொருளென்றால், வேதவாக்கியத்திற்கு அநநுஷ்டாந லக்ஷண அப்ராமாண்யம் விளையாதபடிக்கு இத்தகைய அனுட்டானமுண்டாவதற்கு முயன்று பார்க்கலாமே இவர்.

இவ்விடத்தில் தத்வார்த்த நிரூபணத்தைச் செவ்வனே செய்து மஹோபகாரம் செய்தருளவேணுமிவர். இதுகிடக்க: தமது கட்டுரையில், ''யாகம் அவசியம் செய்யவேண்டியது'' என்றெழுதி யிருக்குமிவர்க்குச் சில விஷயங்களை யுணர்த்த விரும்புகிறேன். இவர்க்கு உணர்த்துவதென்பது வ்யாஜமாத்ரம்; தத்வ புபுத்ஸுக்களுக்கு உணர்த்துகிறேன்.

வேதத்தில் யாகத்தைப்பற்றி விதிகளும் ப்ரசம்ஸைகளும் விசேஷமாகக் காணப்படுகின்றன. ''யஜ்ஞோ வை விஷ்ணு:'' என்றும் ''விஷ்ணுர் வை யஜ்ஞ:'' என்றும் வேதத்தில் வருமிடங்கள் பலபல. ஸஹஸ்ரநாமாத்யாயத்தில் ''யஜ்ஞ: இஜ்ய: மஹேஜ்ய: க்ரது: ஸத்ரம்'' என்று ஐந்து திருநாமங்கள் ஒரே ஸ்தலத்தில் ஓதப்பட்டுள்ளன. இதர தேவதைகளை யஜித்தாலும் அது விஷ்ணுவைத்தான் சேருமென்பது நூற்கொள்கை. ×யே யஜந்தி பித்ரூந் தேவாந் ப்ராஹ்மணாந் ஸஹுதாசநாந், ஸர்வபூதாந்தராத்மாநம் விஷ்ணுமேவ யஜந்தி தே× என்று சாந்தி பருவத்தில் சொல்லிற்று. ×யே த்வந்ய தேவதாபக்தா யஜந்தே ச்ரத்தயாந்விதா:, தேபி மாமேவ கௌந்தேய யஜந்தி அவிதிபூர்வகம்× என்று (9-23) கீதாசார்யன் தானே பணிக்கிருன். யஜுராரண்யகத்தில் ''சதுர்ஹோதாரோ யத்ர ஸம்பதம் கச்சந்தி தேவை:× என்றோதிற்று. சதுர்ஷோதார: — அக்நிஹோத்ரம் தர்சபூர்ணமாஸம் முதலிய கருமங்களானவை யத்ர — பரமாத்மா அந்தராத்மாவா யிருக்குமளவில், தேவை: — அந்த பரமாத்மாவினுடைய சரீரபூதர்களான இந்திரன் முதலான தேவர்களாலே, ஸம்பதம் கச்சந்தி — 'இவை தேவர்களுக்கு ஆராதந பூதங்களான கருமங்கள்' என்கிற மேன்மையைப் பெறுகின்றன. என்று பகவத் பாஷ்யகாரருளிய விவரணம். மேலே யெடுத்த ×சதுர்ஹோதார:× இத்யாதி வாக்யமானது வேதாந்த வாக்யமாதலால் யஜ்ஞவிதி வேதாந்தத்திலுமுள்ளதென்று அறியலாகிறது. ஆழ்வார்கள் திவ்ய ப்ரபந்தங்களில் ஆங்காங்கு திவ்யதேசங்களில் வாழும் அந்தணர்களை ப்ரசம்ஸிக்குமிடங்களில் அத்யயநம், அத்யாபநம், யஜநம், தானம் என்கிற கருமங்களில் அவர்களுக்குள்ள நிஷ்டையைச் சொல்லிப் புகழ்கிருர்கள். திருவாலிப் பதிகமொன்றில் ×சந்தி வேள்வி சடங்கு நான்மறை ஓதியோதுவித்தாதியாய்வரும் அந்தணாளர்× என்கிருர் கலியன். வைதிகர்கள் வாரஞ்சொல்லுவ தென்று ஒன்றுண்டு; அதையும் திருக்கோவலூர்ப் பதிகத்தில்

4

பேசுகிறார் *மண்டபமொண்டொளி யனைத்தும் வாரமோத * என்று. தானப்ரதிக்ரஹங்களில் ப்ரதிக்ரஹீதாக்களிருக்கின்றார்களென்று சொல்லுவது சிறப்பன்றாதலால் தாதாக்களிருக்கின்றார்களென்பதைச் சொல்லுகிறார் நம்மாழ்வார்-*கொடைப் பெரும்புகழாரினையர் தன்னானார்* என்று. யஜ்ஞாநுஷ்டானத்தைப் பற்றிப் பலபல விடங்களில் ஸாதிக்கிறார்கள். யஜ்ஞத்திற்குத் தமிழில் வேள்வியென்று பெயர்; *ஐவேள்வியோடாறங்கம் வல்லவந்தணர் மல்கிய நாங்கூர் * தீயோம்பு கைமறையோர் சிறுபுலியூர் * எரிமூன்றும் செங்கையால் வளர்க்கும் துளக்கமில் மனத்தோர் திருக்கண்ணங்குடி * நல்ல நான்மறையோர் வேள்வியுள் மடுத்த...திருச்சிற்றாறு * மூவாவுருவின் மறையாளர் அந்திமூன்றுமனலோம்பு மணியார் வீதியழுந்தூர் * என்றிவை முதலான பல பாசுரங்கள் காண்க.

கீழே உதாஹரித்த *நல்லநான்மறையோர் வேள்வியென்னும் பாசுரத்தின் (8-4-5) ஈட்டில் நம்பிள்ளை யருளிச்செய்த ஸ்ரீஸூக்திகள் இவை காண்மின்;—''அநந்ய ப்ரயோஜநராகில் இவர்களநுஷ்டானத்துக்கு ப்ரயோஜன மென்னென்னில்; ஸ்வயம்ப்ரயோஜனமாதல், பகவத் ப்ரதிபக்ஷங்களை யழியச் செய்யும் அபிசாரம் பலமாதல். எம்பெருமானைப் போலே யாயிற்று இவ்வூரில் ப்ராஹ்மணரும்'' என்று. இவ்விடத்து அரும்பத விளக்கமும் நோக்கத்தக்கது. ஸாமாந்யமாக ப்ராஹ்மணர்களுடைய போதுபோக்குக்களில் யஜ்ஞாநுஷ்டானம் சிறப்புப் பெற்று வந்திருக்கின்றது.

காம்ய விதிகளில் பல யாகங்கள் விதிக்கப்பட்டுள்ளன. அவற்றில் பசுவிசஸநம் கர்த்தவ்யமாயே யிருக்கும். அந்த பசுவதம் ''அக்நீஷோமீயம் பசுமாலபேத'' இத்யாதி சாஸ்த்ரஸித்தமானது. ''ஆலம்ப: ஸ்பர்சஹிம்ஸயோ:'' என்று நிகண்டு. இந்த ஹிம்ஸையை விஹித ஹிம்ஸை யென்றே வழங்கி வருகிறார்கள். (பசுமாலபேத) (பசுநா யஜேத) என வருமிடங்களில் பசுசப்த வாச்யம் எது? ''சதுஷ்பாத: பசவ:'' என்று வேதத்தில் அடிக்கடிவருவதால் நாற்கால் விலங்குகளெல்லாம் பசுக்களாகையாலே எந்த பசுவைக் கொள்வதென்று விசேஷ ஜிஜ்ஞாஸை விளையும் போது ''ச்சாகஸ்ய வபாயா மேதஸ:'' என்கிற விசேஷ நிர்தேசத்தைக் கொண்டு ச்சாகபசு வென்று நிர்ணீதமாயிற்று. எனவே காம்யேஷ்டிகளில் பசுவதம் அவர்ஜநீயமாயிரா நின்றது.

பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலே ''சடசித்த சாஸ்த்ரவசதோபாய: அபிசாரச்ருதி:'' என்றருளிச் செய்கிறார். ×த்ரைகுண்ய விஷயா வேதா:× என்று கீதாசார்யனருளிச்செய்தபடியே சுத்தஸாத்விகர்களை மட்டும் நோக்கி சாஸ்த்ரம் ப்ரவர்த்திக்கவில்லை. ஸாத்விகரோடு ராஜஸரோடு தாமஸரோடு வாசியற எல்லார்க்கும் வழிகாட்டவந்தது சாஸ்த்ரம். நம் முடைய பூர்வாசாரியர்களில் யாரேனுமொருவர் யாகம் பண்ணினதாகக் கேட்டதுண்டோ? ஏடுகளிற் கண்டதுண்டோ? என்று ஸ்ரீமத் இஞ்சி மேட்டழகிய சிங்கர் பூர்வாச்ரமத்தில் பலகால் பணிக்கக் கேட்டவர்கள் இற்றைக்கும் பலருளர். பஞ்சம வேதமாகச் சொல்லப்பட்ட மஹா பாரதத்திலே மோக்ஷதர்மத்தில் தர்மபுத்திரர்க்கு பீஷ்மராலே சொல்லப் பட்டதாகக் காணப்படுகிற உபரிசரவஸுவின் கதையைச் சுருக்கமாக இங்கு விஜ்ஞாபிக்கிறேன். உபரிசரவஸுவென்கிற ராஜா ரிஷிகளும் தேவர்களும் தன் பக்கலிலே வந்து தர்ம ஸந்தேஹங்கள் கேட்க வேண் டும்படி மஹாஜ்ஞாநாதிகனா யிருந்தவன், கர்மானுஷ்டானத்திலும் கைதேர்ந்தவன். தனது தபோபலத்தினால் ஸபரிவாரனாய் விமானமேறி ஆகாசத்திலே தாராளமாக ஸஞ்சரித்துக் கொண்டிருந்தவன். அவன் காலத்திலே ரிஷிகளுக்கும் தேவர்களுக்கும் யாகார்த்தமான பசுநிமித்த மாய் விவாதம் விளைந்தது. பிஷ்ட பசுவைக் கொண்டு யஜிக்க வேணு மென்பது மஹர்ஷிகளின் பக்ஷம்; ச்சாகபசுவைக் கொண்டே யஜிக்க வேணுமென்று மாம்ஸலுப்தர்களான தேவர்களின் பக்ஷம். இங்ஙனே இருவகைப் பக்ஷத்தையும் உபரிசரவஸுவிடம் தெரிவித்து, எந்த பக்ஷம் யுக்தமான தென்பதை நீர் சொல்லவேணுமென்று உபரிசரவஸுவைக் கேட்க, அவன் தேவபக்ஷபாதியாய் ச்சாகத்தாலே யஜிக்கவேணுமென் றான். உடனே ரிஷிகளெல்லாரும் சீற்றங்கொண்டு அந்த வஸுவைப் பார்த்து 'நீ சொன்னது வேத ஸூத்ரங்களுக்கு விருத்தமாகையாலே தத்க்ஷணமே கீழே விழக்கடவாய்; இனி யுனக்கு ஆகாசகமனமின்றிக்கே பாதாளவாஸமேயாகக் கடவது; நாங்கள் உன்னை இங்ஙனே சபித்தது தவறாகில் நாங்கள் பாதாளத்தில் விழக்கடவோம்' என்றார்கள். பின்னை என்னாயிற்று? ''ததஸ் தஸ்மிந் முஹூர்த்தே து ராஜா உபரிசரவஸுஸ் ததா, அதோ வை ஸம்பபூவாசு பூமேர் விவரகோ ந்ருப:'' என்று பீஷ்மர் சொன்னபடியே அப்போதே பாதாளத்திலே விழுந்தொழிந்தான்.

பிறகு அவ்வரசன் பகவத் கருணையாலே கஷ்ட நிவ்ருத்தி யடைகிறனென்ப திருந்தாலும் அவன் தேவபக்ஷபாதியாய்ச் சொன்னது தவறு தவறுதான் என்கிற ஸித்தாந்தமே அவ்விடத்தில் ஊர்ஜிதமாய்க் கிடக்கிறது. சாந்திபர்வணி மோக்ஷ தர்மே முந்நூற்று முப்பத்தேழா மத்யாயம் பல வைதிகர்களுக்குக் கண்டபாடமாயிரா நின்றது. 'தாந்யைர் யஷ்டவ்யம்' என்கிற பக்ஷம் மஹர்ஷிகளுடையது. 'ச்சாகேநாஜேந யஷ்டவ்யம்' என்கிற பக்ஷம் தேவர்களுடையது. தேவபக்ஷம் அஸங்கதமென்று முடிவுபெற்றது. ப்ராணிவதத்தில் வெறுப்புக் கொள்ளாத குணசாலிகள் பசுமாரணகர்மணி நிஷ்ணாதர்களா யிருக்கின்றார்களென்றால் அதை இல்லை செய்வோமல்லோம். *த்ரைகுண்ய விஷயா வேதா:* என்றவுடனே கீதாசார்யன் *யாவாநர்த்த உதபாநே ஸர்வதஸ் ஸம்ப்லுதோதகே, தாவாந் ஸர்வேஷு வேதேஷு ப்ராஹ்மணஸ்ய விஜாநத:* என்றருளிச் செய்தான். இங்கு ஸ்வாமியின் பாஷ்யம்—

''ஸர்வேஷு ச வேதேஷு வைதிகஸ்ய முமுக்ஷோ: யதேவ மோக்ஷஸாதநம், ததேவ உபாதேயம் நாந்யத்'' என்றுள்ளது. ஸ்வாமி தேசிகன் தாத்பர்ய சந்த்ரிகையில் ''வேதோதித மபி ந மோக்ஷஸாதநவ்யதிரிக்த முபாதேயம், அநதிக்ருதத்வாத்'' என்று விவரித்தருளினர். புபுக்ஷுக்கள் செய்துபோருமது க்ஷேபிக்கத்தக்கதன்றென்று முடிந்தது.

ஸ்ரீபாஷ்யகாரருடையவும் ஸ்ரீதேசிகனுடையவும் ஸ்ரீஸூக்திகளுக்குமேல் இன்னமும் விவரிக்கவேணுமோ? விவரிக்கவேண்டி நேர்ந்தால் க்ஷண விளம்பமும் பொறாமல் விவரிப்போம். சாரீரகமீமாம்ஸையில் மூன்றாமத்யாயத்தில் முதற் பாதத்தின் முடிவிலுள்ள அந்யாதிஷ்டிதாதிகரணத்தில் இரண்டாவது ஸூத்ரமான ''அசுத்தமிதி சேந்ந சப்தாத்'' என்கிறவிடத்து பாஷ்யாதிகளைக் கொண்டு விவரிப்போம்.

அவசியமானால், (தொடரும்)

(7-ஆம் பக்கத் தொடர்ச்சி)

கவர்னர் தமது உரையில் வித்வான்களின் ஸேவையைக் கொண்டாடுவது மூலம் நல்லதொரு ஸத்ஸம்ப்ரதாயத்தை வளர்க்க வேணும் என்றார். ஸபையின் சார்பாக ஸம்ஸ்க்ருதத்தில் ஸ்ரீரங்கநாத பாதுகா வித்யாலயாவின் ப்ரின்ஸிபால் ஸ்ரீ M. V. வாஸுதேவாசார்யரால் ஸ்வாமிக்கு ஒரு அபிநந்தன பத்ரிகை வாசித்து அளிக்கப்பட்டது. Secretary, Seshasayee Institute of Technology Trichy. வித்வான் திருமலாசார்யர் ஸ்வாமிவித்வான் நவநீதம் ஸ்ரீராமதேசிகாசாரியர் ஸ்வாமி, ஸ்வாமியின் திருக்கல்யாண குணங்களையும், ஸர்வதோமுகமான ஜ்ஞானத்தையும் பெரிதும் பாராட்டிப்பேசினார்கள். திருச்சி, ஸம்ஸ்க்கிருத ஸாஹித்ய பரிஷத் கார்யதர்சி ஸ்ரீ A. குப்புசாமி அய்யர், மதுராந்தகம் ஸ்வாமிக்குப் பொன்னாடை போர்த்தி கௌரவித்தார். பேராசிரியர் திருநாரணன் ஸம்ஸ்கிருத ஸாஹித்ய பரிஷத் சார்பாக அபிநந்தன பத்திரிகையை வாசித்தார்.

பல திவ்ய தேசங்களில் இருந்து மரியாதை ஸ்வாமிக்கு ஸமர்ப்பிக்கப்பட்டது. Principal, Seshasayee Institute of Technology அநந்த நரஸிம்மாசார்யர் க்ருதஜ்ஞதாவிஷ்கரணம் செய்தார்.

விசிஷ்ய தேசிகன் திருமாளிகையிலும், புத்தங்கோட்டம் ஸ்வாமி திருமாளிகையிலும் நடந்த மஹோத்ஸவங்களுக்கு நியந்தாவாய் ஸ்வயம் அகிலநிர்மாண நிபுணராய்' ஸர்வபூத ஹிதைஷியான நமது ஸ்ரீமத் அழகிய சிங்கர் 'ஏஷஹ்யேவாநந்தயாதி' என்றபடி சக்ரவர்த்தி திருமகனுக்கு வஸிஷ்டர் போல் 'அப்யஷிஞ்சந் நரவ்யாக்ரம் ப்ரஸந்நேந ஸுகந்திநா' என்ற க்ரமத்தில் சதாபிஷேகத்தை நமது மதுராந்தகம் ஸ்வாமிக்கு நடத்தி வைத்த க்ருபாபரீவாஹம் வாசாமகோசரம்.

இம்மஹோத்ஸவத்திற்குச் சிகரம்போல், ஞாயிறு இரவு ஸ்ரீ ஸ்வாமி புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்ட காரில் எழுந்தருளி யானை மேளவாத்தியங்கள் முன் செல்ல வேத கோஷ ஸ்தோத்ர பாட கோஷ்டியுடன் சித்திரவீதிகள் பவனி வந்தது ஓர் அத்புதரஸமாய் த்ருஷ்டிசித்தாபஹாரியாய் சோபித்தது. ... ... ...

—ஸ்ரீமான் உ. வே. ஸ்ரீரங்கம் வாஸுதேவாசாரியர்

## P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமியின் நூல் துறைகள்

1 நாலாயிர திவ்யப்பிரபந்த வுரைகள்
2 பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்த ,,
3 ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ர ,,
4 ஆழ்வாராசார்யப் பிரபாவ நூல்கள்
5 இதிஹாஸ புராண சரித்திர ,,
6 ரஹஸ்யார்த்த விளக்க ,,
7 வேதாந்தப் பொருள் விளக்க ,,
8 ஸத்ஸம்ப்ர தாயார்த்த விளக்க ,,
9 வேத விசாரலக்ஷண நூல்கள்
10 லோகாபிராம உபந்யாஸ ,,
11 பரபக்ஷப்ரதிக்ஷேப ,,
12 உபந்யாஸக ஸௌபாக்ய ,,
13 வடமொழி நூல் திரள்கள்
14 ஹிந்தி பாஷையில் நூல்கள்
15 தெலுங்கு பாஷையில் ,,
16 பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள்

விரிவான கியாடலாகுகள் தருவித்து வி



சந்தாப்பணம் M. O. செய்பவர்கள்;

P. B. ANNANGARACHARYA,

*Editor,* Granthamala, Kanchipuram-631503.

என்ற விலாசத்திற்கு அனுப்புக.

If un-delivered please return to:

P. B. ANNANGARACHARYA,
Kanchipuram-631503.

Edited and Published by P. B. Annangaracharya Swami
and Printed by E. Devarajan at Sri Kamakshi Press,
No, 44-c Thirukatchinambl Street, Kanchipuram-631503.